# வைதிக தர்ம வர்த்தனி




மலர் 12
இதழ் 7

விகாரி
சித்திரை

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

17th MARCH 19

## விகாரிஞூ சித்திரைமீ வஸந்தருது. உத்தராயணம்.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ச்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செ. | ஷஷ். | 42-58 | மிருக. | 12-48 | சி. ம. | — |
| 2 | 15 | புதன். | ஸப். | 46-25 | திரு. | 18-23 | சி. | — |
| 3 | 16 | வியா. | அஷ். | 48-13 | புன. | 22-25 | அ. | அஷ் |
| 4 | 17 | வெள். | நவ. | 48-10 | பூச. | 24-47 | ம. | நவ. |
| | 18 | சனி. | தச. | 46-05 | ஆயி. | 25-10 | ம. அ. | தச. |
| 6 | 19 | ஞா. | ஏகா. | 42-07 | மக. | 23-40 | ம. சி. | ஏகா. |
| 7 | ஏப்ரல் மீ 20 | திங். | த்வா. | 36-23 | பூர. | 20-20 | சி. | த்வா |
| 8 | 21 | செவ். | த்ர. | 29-15 | உத். | 15-30 | அ. சி. | த்ர. |
| 9 | 22 | புத. ○ | சசி. | 21-00 | ஹஸ். | 9-27 | சி. | ச. பூ. |
| 10 | 23 | வியா. | பௌ. | 11-55 | சித். | 2-32 | சி. | ப்ர. |
| | | | | | சுவா. | 55-10 | அ. சி. | |
| 1 | 24 | வெள். | ப்ர. | 2-35 | விசா. | 47-53 | சி. | த்வி. |
| | | | த்வி. | 53-15 | | | | |
| 2 | 25 | சனி | த்ரி. | 44-53 | அனு. | 41-03 | சி. | த்ரி. |
| 3 | 26 | ஞா. | சது. | 36-35 | கேட். | 35-05 | ம. அ. | சது. |
| 4 | 1959 ஞ 27 | திங். | பஞ். | 29-55 | மூலம். | 30-22 | சி. | பஞ். |
| 5 | 28 | செவ் | ஷஷ். | 24-52 | பூரா. | 27-15 | சி. | ஷஷ் |
| 6 | 29 | புதன் | ஸப். | 21-33 | உத்தி. | 25-52 | அ. சி. | ச. அ. |
| 7 | 30 | வியா. | அஷ். | 20-10 | சிர. | 26-22 | சி. | நவ. |
| 8 | 1 | வெள். | நவ. | 20-35 | அவி. | 28-53 | சி. | தச. |
| | 2 | சனி | தச. | 22-48 | சத. | 32-38 | அ. ம. | — |
| | 3 | ஞா. | ஏகா. | 26-30 | பூரட். | 38-02 | சி. அ. | ஏகா. |
| | 4 | திங். | த்வா. | 31-20 | உத்தி. | 44-28 | சி. | த்வா. |
| | மே மீ 5 | செவ். | த்ர. | 37-02 | ரேவ. | 51-40 | அ. | த்ர. |
| | 6 | புதன் | சசி. | 43-13 | அசு. | 59-15 | ம. சி. | சசி. |
| | 7 | வியா ● | அமா. | 49-35 | பர. | 60-00 | சி. | அமா |
| | 8 | வெள். | ப்ர. | 56-00 | ,, | 7-08 | சி. | ப்ர. |
| | 9 | சனி | த்வி. | 60-00 | க்ருத். | 14-40 | அ. | த்வி. |
| | 10 | ஞா. | ,, | 2-03 | ரோ. | 21-58 | சி. | த்ரி. |
| | 11 | திங். | த்ரி. | 7-37 | மிருக. | 28-45 | சி. | சது. |
| | 12 | செவ். | சது. | 12-25 | திரு. | 34-42 | ம. சி. | பஞ். |
| | 13 | புதன் | பஞ். | 16-13 | புன. | 39-35 | சி. | ஷஷ் |
| | 14 | வியா. | ஷஷ். | 18-45 | பூச. | 43-10 | சி. | சப். |

6, 20 உ ஏகாதசி. 7, 22உ ப்ரதோஷம்.
24உ அமாவாசை. 25உ கிருத்திகை விரதம்.

**ஸம்ப்ரதாயம் சாஸ்த்ரத்தின் ஸாரம்.**

வைதிக தர்ம வர்த்தனீ.



விகாரிஹு சித்திரைமீ
மலர் 12] [இதழ் 7.
தனிப்ரதி அணா 7.
வருஷசந்தா ரூ. 5.
கார்யாலயம் : கடவாசல்,
வடகால் P.O. (Via.) சீர்காழி.
(தஞ்சை ஜில்லா.)

## பொருளடக்கம்.



## தார்மிகச் செய்திகள்.

### வேத பாஷ்ய பரீக்ஷை:

சென்னை திருவான்மியூரில் ஸ்ரீஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடம் தலைவர் முன்னிலையில் ரிக் யஜுஸ் சுக்லயஜுஸ் ஸாமவேத பாஷ்ய பரீக்ஷை நடந்தது. 50-பேருக்குமேல் மாணவர் வந்தனர்.

### ஸ்ரீ சகடபுரம் சங்கராசார்யாள் பூனா விஜயம்.

21-1-1959 ல் பூனாவிலுள்ள தென்தேசத்தவர் ஷ ஸ்வாமிகளுக்கு சிறப்பாக வரவேற்பளித்தனர். ஸ்ரீV. S. P. ராகவன் அவருடைய கிரஹத்தில் பெரிய பந்தலமைத்து ஸ்ரீ ஆசார்யாளை வரவெற்று எல்லோரும் கண்டு தரிசித்து ஆனந்தப்படும்படி செய்தார். பல்லாயிரம்பேர் சூழ ஊர்வலம் வந்தது. இவ்வளவு கூட்டம் இதுவரை வந்ததில்லை என்கின்றனர்.

### சாதுர்மாஸ்ய யாகம்.

குன்னம் ஸ்ரீ கோதண்டராம தீக்ஷிதர் பிரதமகுமாரர் ஸ்ரீ கோபாலகிருஷ்ண தீக்ஷிதர் 9—3—59 முதல் ஒரு வாரம் சிதம்பரம் புதுத்தெரு வேத பாராயண மடத்தில் ஷ யக்ஞம் நடத்தினார்.

### ஜபல்பூர் ராம பக்தி.

ஒரு ஜைநபத்திரிகை ஸீதா ராமர்களை அவமதித்து எழுதியதைக்கண்டு ராம பக்தர் கிளர்ச்சி செய்ய ஷ காபிகளை அரசாங்கம் கைப்பற்றி அந்த விஷயம் வெளிவராமல் செய்தது! நம் நாட்டில், ராமாணம் பற்றி நடைபெறும் ஆபாஸங்களுக்குக் கேள்வி இல்லை!

### நன்மை உண்டா?

இந்திய அரசாங்கம், கோவில் மடம் முதலிய தர்ம ஸ்தாபன விஷயமாக ஒரு சட்டம் செய்யப் போகிறதாம்! இடிந்தவைகளைப் புதுப்பித்து முன் நிலைக்குக் கொண்டுவருவதானால் வரவேற்கலாம்!

### நன்மையும் தீமையும்.

கவி சக்ரவர்த்தி காளிதாஸன் 'சாகுந்தலத்தை' தமிழ், ஹிந்தி, ஆங்கிலம் ஆகிய மூன்று பாஷைகளிலும் படமெடுக்கிறார்கள். தர்மம் ஆசாரம் நீதி முதலியவைகளைக் கவிதா ரஸத்துடன் பொதுமக்களுக்குக் காட்டுவது நலம். ஆனால் தற்கால ஆபாஸம் அதில் சேர்ந்தால் பெருந் தீங்கு!

### ஜகத்குரு பிரயாணம்.

18-3-59 ஸ்ரீகாஞ்சி ஆசார்யாள் சென்னையை விட்டுக் கிளம்பி அம்பத்தூர் அரக்கோணம் வழியாகக் காஞ்சி செல்கிறார்கள்.

### வந்தனோபசார வழிபாடு.

ஸ்ரீ ஜகத்குரு காமகோடி பீடாதிபதிகளுக்கு 15உ மாலை 7-30 மணிக்கு மைலை ஸம்ஸ்கிருதகலாசாலையில் இதுவரை எங்கும் எவருக்கும் நடந்திராதபடி 80 ஆயிரம் ஜனங்கள் கூடி பல வாழ்த்துப் பத்திரங்கள் படித்தனர். சென்னைக்கருகே வாஸந்த நவராத்ரி.

# ஸ்ரீ சங்கர ஜயந்தி வைபவம்.

'ஶங்கர' என்ற சொல்லிற்கு மங்களத்தைச் செய்பவர் என்று பொருள். ஆனால், சிவனுக்கே இது சிறப்புப் பெயர். படைப்பவர் ப்ரும்மா. பரிபாலிப்பவர் விஷ்ணு. தனக்குள் ஒடுக்கிக்கொள்பவர் ஶிவன். முறையே, ஸ்ருஷ்டி, ஸ்திதி. லயம் என்பன மும்மூர்த்திகளின் வேலை. முதல் இரண்டும் மங்களமாகவும் பின்னது அமங்களமாகவும் தோற்றுகிறது அல்லவா? ஸம்ஹாரம் அல்லது ஒடுங்கல் என்பது மரணம் என்ற பொருளையே குறிக்கும். ஜீவனை ஸம்ஹாரம் செய்பவர் எப்படி ஶங்கரராவர்? படைப்பதும் பரிபாலிப்பதுமே ஶங்கரமான வேலை எனத் தோன்றும் பலருக்கு. இதன் தத்வம் யாது?

உலகம் அனாதி. அவரவர் கர்மாவுக்கேற்றபடி உடலைத் தருகிறார் ப்ரும்மா. அந்த ஸ்ருஷ்டியில் ஏற்றத் தாழ்வு உண்டு. கர்ப்ப வாஸத்தைப்போல் வேறு துக்கம் இல்லை! ப்ரஸவ வேதனையைப் போன்ற துன்பம் வேறில்லை! உடல் எடுப்பது செய்தவினையை அனுபவிப்பதற்கேயாம். கர்மா தீனமாக ஒருவனை ஏழையாகவும், ஒருவனைத் தனிகனாகவும், ஒருவனை ரோகியாகவும், ஒருவனை நோயற்றவனாகவும், ஒருவனை மேதாவியாகவும், ஒருவனை ஜடனாகவும் படைக்கிறார் ப்ரும்மா.

பரிபாலன மூர்த்தியும் அவனவன் செய்த கர்மாவிற்கேற்றபடி சிலருக்குக் கால் வயிற்றிற்கு அன்னம் அளிக்கிறார். சிலருக்கு அரைவயிற்றிற்கும், சிலருக்கு முழு வயிற்றிற்கும் அன்னம் அளிக்கிறார். ஆதலின், இவ்விரண்டிலும் ஏற்றத் தாழ்வும் இன்பதுன்பமும் உண்டு. 'லயம்' என்பது ஸுஷுப்தியாம். அதாவது, கை கால்களோ, கண் காது முதலியனவோ, மனமோ வேலையற்று ஒடுங்கியிருப்பதாம். அச்சமயம், நமது ஸொந்த அனுபவத்தால் மாத்ரம் அறியத்தக்க இன்பம் உண்டாகிறது. உறங்கும் போது நாம் ஒன்றையும் அறிவதில்லை. எழுந்தபின் "ஆனந்தமாக உறங்கினேன்" என்கிறோம். இது ஆனந்த

---

அனுபவத்தை நினைத்துக் கூறும் சொல். அனுபவிக்காததை நினைக்க முடியாது. அனுபவித்தேன் என்று நமக்கு ஸ்ம்ருதி உண்டாகின்றது. ஆதலால், அனுபவிக்கின்றவன் யார்? எப்படி? என்று கூறமுடியாமல் உறக்கத்தில் ஓர் ஆனந்த அனுபவம் உண்டாகின்றது என்பது திண்ணம். இந்த அனுபவத்தில் தாரதம்யம் கிடையாது. ஏன்? தாரதம்ய பலனை அளிக்கும் கர்மா அங்கிருந்தாலல்லவோ அது தோன்றும்? ஸுகமாகத் தூங்கினேன் என்ற அனுபவம் ஒன்றே. உறங்கும் எல்லோருக்கும் ஸமமாகவே இருக்கின்றது. அதில் பேதமில்லை. நாம் இரவில் உறங்குவதுபோல், உலகம் சிவனிடம் உறங்குவதுதான் ப்ரளயமாம். அந்த ப்ரளயத்தில் ஜீவராசிகள் கர்மபயனை அனுபவியாமல் சும்மாயிருக்கின்ற ஸுகத்தை அனுபவிக்கின்றன. அந்த ஸுகத்தைத் தருவதால்தான் ஶிவனை ஶங்கரன் என்கிறோம். மரண துன்பம் சிறிது நேரமேயாம்.

ப்ரளயமான பின்பு மறுபடி ஸ்ருஷ்டி தோன்றும். அதுகாலை ஜீவராசிகள் கர்மத்திற்கேற்றபடி இன்ப துன்பங்களை அனுபவிக்க உடலை எடுக்கின்றன. ப்ரளயத்தில் லயித்ததுபோல் அவனிடம் ஒடுங்கி, மறுபடி பிறவாத வண்ணம் இருத்தலே மோக்ஷமாம். அதை உலகிற்குக் கற்பிக்கவே ஶங்கரன் ஶங்கரராகத் தோன்றினர். அவர் காட்டிய இன்பவழியே அத்வைத வேதாந்தம். மறையில் மறைந்துகிடந்த இந்த மோக்ஷமார்க்கத்தை விளக்கியவரே ஸ்ரீ சங்கரகுரு. அதுமாத்ரமின்றி வேதவிதிக்கு முரணான அநாசாரங்களைக் களைந்து ஶாஸ்த்ர ரீதியாக ஆறு மதங்களையும் ஸ்தாபித்தார்.

அதில் ஒரு மதம் வைஷ்ணவ மதம். அவரை விஷ்ணு த்வேஷி எனக் கூறுவது தவறு. பஜ கோவிந்தம், ஹரிமீடே ந்ருஸிம்ஹ ஸ்துதி போன்ற பலஸ்துதிகள், இவரை விஷ்ணு த்வேஷியல்ல எனக்கூறும். நூல்களை இயற்றி, மட நிர்மாணமூலம் அத்வைதப்ரசாரம் செய்ததும், பாரமார்த்திக தஶையில், க்ஞானியின் அனுபவத்தில்தான் உலகம் மாயை. வ்யாவஹாரிக தஶையில் உலகம் ஸத்யமே என்கிறார். ப்ரௌடமான பாஷ்யாதி வாத க்ரந்தங்களாலும்,

---

நமது ஸ்வல்ப அறிவால் ஒன்றை நிர்ணயிக்காதே.

மத்யமமான ப்ரகரண க்ரந்தங்களாலும், ஸாதாரணமான ஸ்துதிகளாலும் உலகை உய்விக்க வந்த உத்தம குரு அவர். பாரமார்த்திக தசையிலேயே, க்ஞானி த்ருஷ்டியில் மாத்ரம் த்வைதமில்லை, அத்வைதம் எனக் கூறினரே தவிர, நம் போன்றவர்கள் எல்லாம் த்வைதத்தில்தான் இருக்கவேண்டுமென்று ஆணையிட்ட அறிவுக் களஞ்சியமான ஆசார்யரவர்.

பேரானந்த வழிகாட்டிய பேராசிரியன்! துன்பம் அகலத் துணையாக நின்ற குரு! கர்ம மார்க்கத்தைக் கைவிடாதே க்ஞானம் வரும்வரை, என்ற கருணை மூர்த்தி! வேதக் கருத்தை விளக்கிய க்ஞான விளக்கு! அறிவே உருவாய் அமைந்த அண்ணல்! அவர் தம் அவதரித்த அதிபவித்ரமான நாளை அனைவரும் வீடுவீடாகக் கொண்டாட வேண்டும். அவருடைய அர்ச்சனையிலும், அவரது புனித உபதேசத்திலும் அனைவரும் ஈடுபடவேண்டும் என அவர் பூஜா கல்பத்துடன் வெளியிடப்படுகிறது.

## ஸ்ரீ சங்கர பகவத்பாத பூஜா கல்பம்.

**ஸங்கல்பம்:** ஶுக்லாம்பரதரம் — ஶாந்தயே. மமோபாத்த—ப்ரீத்யர்த்தம்—ஶுபே ஶோபனே முஹூர்த்தே-ஶுபதிதௌ க்ஞான வைராக்ய ஸித்யர்த்தம் ஸ்ரீ ஶங்கர ஜயந்தி புண்யகாலே ஸ்ரீமத் ஶங்கர பகவத் பாத பூஜாம் கரிஷ்யே. பிறகு கலஶ பூஜை செய்து, ஆதௌ ஸகல கார்ய நிர்விக்னதா ஸித்யர்த்தம் மஹாகணபதி பூஜாம் கரிஷ்யே என்று விக்னேஶ்வர பூஜை செய்யவேண்டும். வக்ர துண்ட மஹாகாய ஸூர்யகோடி ஸமப்ரப, அவிக்னம் குருமே தேவ ஸர்வகார்யேஷு ஸர்வதா என்று ப்ரார்த்தனை செய்துகொண்டு ஆசார்ய பூஜை செய்யவேண்டும்.

அக்ஞானாந்தர் கஹனபதிதான் ஆத்ம வித்யோபதேஶை:
த்ராதும் லோகான் பவ தவ ஶிகா தாப பாபச்ய மானான்
முக்த்வா மௌனம் வடவிடபினோ மூலதோ நிஷ்பதந்தி
ஶம்போ: மூர்த்தி: சரதி புவனே ஸ்ரீ ஶங்கராசார்ய ரூபா.
(த்யாயாமி)

---

**ஸம்ப்ரதாயமும் சாஸ்த்ரமும் நம் அறிவுக்கு எட்டாது.**

வேதாந்தார்த்த ததா பாஸ க்ஷீரநீர விவேகினம்
நமாமி பகவத்பாதம் பரஹம்ஸ துரம் தரம். (ஆவாஹயாமி)

| | |
|---|---|
| ஸர்வக்ஞ பிடாதிஷ்டாத்ரே நம: | (ஆஸனம் ஸமர்ப்பயாமி) |
| பத்மபாதார்ச்சி தாங்க்ரிகாய நம: | (பாத்யம் ,, ) |
| ஜகத் பூஜ்யாய நம: | (அர்க்யம் ,, ) |
| சிதானந்தாய நம: | (ஆசமனீயம் ,, ) |
| நிர்மலாய நம: | (ஸ்னானம் ,, ) |
| காஷாய வஸனே பேதாய நம: | (வஸ்த்ரம் ,, ) |
| ப்ரஹ்ம க்ஞான ப்ரதாய காய நம: | (உபவீதம் ,, ) |
| பஸ்மோத்தூளித விக்ரஹாய நம: | (கந்தம் ,, ) |
| அக்ஷராய நம: | (அக்ஷதான் ,, ) |
| விஶால வக்ஷஸே நம: | (ஆபரணம் ,, ) |
| ஸுஹாஸாய நம: | (புஷ்பாணி ,, ) |

## அஷ்டோத்தர அர்ச்சனே.

ஆரம்பத்தில் 'ஓம்' என்று சேர்த்துப் படிக்கவும்.

ஓம் சங்கராசார்ய வர்யாய நம:
ப்ரும்மக்ஞான ப்ரதாயகாய நம:
அக்ஞான திமிராதித்யாய நம:
ஸுக்ஞானம்புதி சந்த்ரமஸே ,,
வர்ணாச்ரம ப்ரதிஷ்டாத்ரே நம:
ஸ்ரீமதே நம:
முக்தி ப்ரதாயகாய நம:
சிஷ்யோபதேச நிரதாய நம:
பக்தாபீஷ்ட ப்ரதாயகாய நம:
ஸூக்ஷ்மதத்வ ரஹஸ்யக்ஞாய ,,
கார்யாகார்ய ப்ரபோத காய நம:
க்ஞான முத்ராஞ்சிதகராய நம:
சிஷ்ய ஹ்ருத்தாப அபகாரகாய,,
பாரிவ்ராஜ்யாச்ரமோத்தர்த்ரே,,
ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரதியே நம:
அத்வைத ஸ்தாபனாசார்யாயநம:
ஸாக்ஷாத் சங்கரரூப ப்ருதே நம:
ஷண்மத ஸ்தாபனாசார்யாய நம:

ஓம் த்ரயீமார்க்க ப்ரகாசகாய நம:
வேதவேதாந்த தத்வக்ஞாய நம:
துர்வாதி மதகண்டனாய நம:
வைராக்ய நிரதாய நம:
சாந்தாய நம:
ஸம்ஸாரார்ணவ தாரகாய நம:
ப்ரஸன்ன வதனாம்போஜாயநம:
பரமார்தத் ப்ரகாசகாய நம:
புராண ஸ்ம்ருதிஸாரக்ஞாய நம:
நித்ய த்ருப்தாய நம:
மஹதே நம:
சுசயே நம:
நித்யானந்தாய நம:
நிராதங்காய நம:
நிஸ்ஸங்காய நம:
நிர்மலாத்மகாய நம:
நிர்மமாய நம:
நிரஹங்காராய நம:

---

அதன்படி நடப்பதே முறை. பலன் பிறகே தெரியும்.

ஓம் விச்வவந்த்ய பதாம்புஜாயநம:
ஸத்வ ப்ரதானய நம:
ஸத்பாவாய நம:
ஸங்க்யாதீத குணோஜ்வலாய நம:
அனகாய நம:
ஸாரஹ்ருதயாய நம:
ஸுதியே நம:
ஸாரஸ்வத ப்ரதாய நம:
ஸத்யாத்மனே நம:
புண்யசீலாய நம:
ஸாங்க்யயோக விசக்ஷணய நம:
தபோராசயே நம:
மஹாதேஜஸே நம:
குணத்ரய விபாகவிதே நம:
கலிக்னய நம:
காலதர்மக்ஞாய நம:
தமோகுண நிவாரகாய நம:
பகவதே நம:
பாரதீஜேத்ரே நம:
சாரதாஹ்வான பண்டிதாய நம:
தர்மாதர்ம விபாகக்ஞாய நம:
லக்ஷ்யபேத ப்ரதர்சகாய நம:
நாதபிந்து கலா பிக்ஞாய நம:
யோகிஹ்ருத்பத்மபாஸ்கராயநம:
அதீந்த்ரியக்ஞான நிதயே நம:
நித்யாநித்ய விவேகவதே நம:
சிதானந்தாய நம:
சின்மயாத்மனே நம:
பரகாய ப்ரவேசக்ருதே நம:
அமானுஷ சரித்ராட்யாய நம:
க்ஷேமதாயினே நம:
க்ஷமாகராய நம:
பவாய நம:
பத்ர ப்ரதாய நம:
பூரி மஹிம்னே நம:

ஓம் விச்வ ரஞ்ஜகாய நம:
ஸ்வப்ரகாசாய நம:
ஸதாதாராய நம:
விச்வபந்தவே நம:
சுபோதயாய நம:
விசால கீர்த்தயே நம:
வாகீசாய நம:
ஸர்வலோக ஹிதோத்ஸுகாய,,
கைலாஸ யாத்ரா ஸம்ப்ராப்த
சந்த்ரமௌளிப்ரபூஜகாயநம:
காஞ்ச்யாம் ஸ்ரீ சக்ர ராஜாக்ய
யந்த்ர ஸ்தாபன தீக்ஷிதாயநம:
ஸ்ரீ சக்ராத்மக தாடங்க போஷி
தாம்பா மனோரதாய நம:
ஸ்ரீ ப்ரஹ்ம ஸூத்ரோப நிஷத்
பாஷ்யாதிக்ரந்தகல்பகாயநம:
சதுர்திக் சதுராம்னய ப்ரதிஷ்
டாத்ரே நம:
மஹாமதயே நம:
த்விஸப்ததி மதோச்சேத்ரேநம:
ஸர்வதிக் விஜய ப்ரபவே நம:
காஷாய வஸனோபேதாய நம:
பஸ்மோத்தூளிதவிக்ரஹாயநம:
க்ஞானாத்மகைகதண்டாட்யாய,,
கமண்டலு லஸத்கராய நம:
வ்யாஸ ஸந்தர்சன ப்ரீதாய நம:
பகவத்பாத ஸம்க்ஞகாய நம:
ஸௌந்தர்ய லஹரீ முக்ய பஹு
ஸ்தோத்ர விதாயகாய நம:
சதுஷ்ஷஷ்டி கலாபிக்ஞாயநம:
ப்ரஹ்மராக்ஷஸ போஷகாய நம:
ஸ்ரீமன் மண்டன மிச்ராக்ய ஸ்வ
யம்பூஜயஸன்னுதாய நம:
தோடகாசார்ய ஸம்பூஜ்யாயநம
பத்மபாதார்ச்சி தாங்க்ரிகாயநம:

---

**ஸம்ப்ரதாயத்தை மீறுவது முன்னோரை அவமதிப்பதாம்**

ஓம் ஹஸ்தாமலக யோகீந்த்ர ப்ர
ஹ்மக்ஞான ப்ரதாயகாய நம:
ஸுரேச்வராக்யஸச்சிஷ்ய ஸன்
யாஸாச்ரம தாயகாய நம:
நிர்வ்யாஜ கருணாமூர்த்தயே நம:
ஜகத்பூஜ்யாய நம:

ஓம் ஜகத் குரவே நம:
பேரீ படஹவாத்யாதி ராஜ
லக்ஷண லக்ஷிதாய நம: [நம:
ஸக்ருத் ஸ்மரணஸந்துஷ்டாய
ஸர்வக்ஞாய நம:
க்ஞான தாயகாய நம:

ஸ்ரீமத் ஶங்கர பகவத் பாதாய நம:
நாநாவித பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

வனஸ்பதி ரஸோத்பூத: கந்தாட்யோ கந்த உத்தம:
ஆக்ரேயஸ் ஸர்வ தேவானாம் தூபோயம் ப்ரதிக்ருஹ்யதாம்
ஸுக்ஞானம் புதி சந்த்ரமஸே நம: தூபம் ஆக்ராபயாமி.
ஸாஜ்யம் த்ரிவர்திஸம்யுக்தம் வஹ்னினா யோஜிதம் மயா
க்ருஹாண மங்களம் தீபம் த்ரைலோக்ய திமிராபஹம்.
அக்ஞான திமி ராதித்யாய நம: தீபம் தர்ஶயாமி.
அன்னம் சதுர்விதம் ஸ்வாது பயோததி க்ருதம் ததா
நானா வ்யஞ்ஜன ஶோபாட்யம் நைவேத்யம் ப்ரதி க்ருஹ்ய
நித்யத்ருப்தாய நம: நைவேத்யம் ஸமர்ப்பயாமி. [தாம்
பூகிபல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம்
கர்பூர சூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம்
தாம்பூலம் ஸமர்ப்பயாமி.
சந்த்ராதித்யௌச தரணீ வித்யுத் அக்னி: த்வமேவச
த்வமேவ ஸர்வ ஜ்யோதீம்ஷி பஜநீராஜனம் ப்ரபோ
மஹாதேஜஸே நம: நீராஜனம் தர்ஶயாமி [னே
வேதாந்தார்த்த விபாஸ காய குரவே ஶாந்தாய ஸன்யாஸி
நானாவாதி நகேந்த்ர ஸங்கபவயே யோகீந்த்ர வந்த்யாயச
மோஹத்வாந்த திவாகராய பகவத்பாதாபிதாம்பிப்ரதே
தஸ்மை பாஷ்யக்ருதே நமோஸ்து ஸததம்பூர்ணாய போதாத்மனே
மந்த்ர புஷ்பம் ஸமர்ப்பயாமி.
யானி கானி ச பாபானி ஜன்மாந்தர க்ருதானிச
தானி தானி விநஶ்யந்தி ப்ரதக்ஷிண பதே பதே
ப்ரதக்ஷிணம் ஸமர்ப்பயாமி.
ஶ்ருதி ஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம்
நமாமி பகவத் பாத ஶங்கரம் லோகஶங்கரம்
குருர் ப்ருஹ்மா குருர் விஷ்ணு: குருர்தேவோ மஹேஶ்வர:
குருஸ் ஸாக்ஷாத் பரம்ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:

---

**சிஷ்டாசாரத்தை நன்கு செய்ய முடியாதிருக்கலாம்.**

அக்ஞான திமி ராந்தஸ்ய க்ஞானஞ்ஜன ஶலாகயா
சக்ஷு: உன்மீலிதம் யேனதஸ்மை ஸ்ரீ குரவே நம:
ப்ரஹ்மானந்தம் பரமஸுகதம் கேவலம் க்ஞான மூர்த்திம்
த்வந்த்வாதீதம் ககன ஸத்ருஶம் தத்வ மஸ்யாதி லக்ஷ்யம்
ஏகம் நித்யம் விமலமசலம் ஸர்வதீ ஸாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுணரஹிதம் ஸத்குரும் தம் நமாமி.

(நமஸ்காரம்)

ஶாஸ்த்ரம் ஶாரீர மீமாம்ஸா தேவஸ்து பரமேஶ்வர:
ஆசார்ய: ஶங்கராசார்ய: ஸந்துமே ஜன்ம ஜன்மனி
ஜயது ஜயது நித்யம் ஶங்கரா சார்ய வர்யோ
ஜயது ஜயது தஸ்ய அத்வைத வித்யா அனவத்யா
ஜயது ஜயது லோகே தத்சரித்ரம் பவித்ரம்
ஜயது ஜயது பக்திஸ் தத்பதாப்ஜே ஜனனும்.

(ப்ரார்த்தனே)

மஹா த்ரிபுர ஸுந்தரீரமண சந்த்ர மௌளீஶ்வர
ப்ரஸாத பரிலப்த வாங்மய விபூஷிதா ஶாந்தரம்
நிரந்தர முபாஸ்மஹே நிருபமாத்ம வித்யாநதீ
நதீநத பதிப்ரபம் மனஸி ஶங்கரார்யம் குரும் ।
காஞ்சீபுரா பரண காமத காமகோடி
பீடாபி ஷிக்த வரதேஶிக ஸார்வ பௌம
ஸார்வக்ஞ ஶக்த்யதி கதாகில மந்த்ர தந்த்ர
சக்ர ப்ரதிஷ்டித விஜ்ரும்பித சாதுரீக ।
நாராயணம் பத்மபுவம் வஸிஷ்டம் ஶக்திம்ச
தத் புத்ர பராஶரம் ச । வ்யாஸம் ஶுகம்
கௌடபதம் மஹாந்தம் கோவிந்த யோகிந்த்ரம்
அதாஸ்ய ஶிஷ்யம் ॥ ஸ்ரீ ஶங்கரா சார்யம்
அதாஸ்ய பத்ம பாதம் ச ஹஸ்தாமலகம் ச ஶிஷ்யம்
தம் தோடகம் வார்த்திக காரம்
அன்யான் அஸ்மத் குரூன் ஸந்தத மான தோஸ்மி. ।
அஷ்ட ஷஷ்டி பத மண்டனம் குரோ:
ஶிஷ்ட துஷ்டி பரி பாலனுதரம்
சந்த்ர ஶேகர ஸரஸ்வதீ பதம்
சந்த்ர சூடமிவ நௌமி ஶங்கரம்.

ஓம் தத் ப்ருஹ்மார்ப்பண மஸ்து.

---

அதைமீறி ஒன்றைச் செய்தால் முன்னோர் முட்டாள்.

# ஸ்ரீ சங்கர குரு சரிதம்.

முன்னொரு ஸமயம் கைலாஸகிரியில் பார்வதீ ஸமேதரான பரமேச்வரனை தேவர்கள், நமஸ்கரித்து "ஓ, பகவானே! பூமியில் ஸகல வேத சாஸ்த்ரங்களும் அழிந்துவிட்டன. எங்கும் பௌத்த மதமே வ்யாபித்திருக்கிறது. ஸத்தர்மத்தைக் காக்க அருள் புரிய வேண்டும்" என வேண்டினர். ஸ்ரீ சங்கரர், "நான் இப்பெயருடன் ஓர் யதியாக அவதரித்து உங்களிஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன். நீங்களும் எனக்கு அநுகூலமாக பூமியில் அவதரியுங்கள்" என்றருளினர். தேவேந்திரன் "ஸுதன்வா" என்ற அரசனைகத்தோன்றி தர்ம பரிபாலனஞ் செய்துவந்தார். ஸுப்ரஹ்மண்யர் "குமாரில பட்டர்" என்ற த்விஜராகவந்து, ஸுதந்வாவின் ஸபையிலுள்ள பௌத்தர்களை வாதத்தால் ஜயித்தார். அது ப்ரமாணமாகாதெனவே, குமாரிலர் மலையின்மீதேறி "வேதம் ப்ரமாணமானால் எனக்கொரு கெடுதலுமிராது" என்று கீழே விழ, தேகத்தில் ஒருவித காயமுமில்லை. எதிரி அதை ஜாலவித்தை யெனவே, அரசன் ஒரு பானையில் பாம்பை விட்டு வாயை மூடி "இதனுள்ளே என்ன?" என்று வினவினர். குமாரிலர் "சேஷசாயி நாராயணன்" என்றும். பௌத்தர் இரவெல்லாம் ஸூர்யனை உபாஸித்து "பாம்பு" என்றும் சொன்னார்கள். அரசன் பானையைத் திறந்து சேஷசயனத்தைக்கண்டு ஆனந்தித்து பௌத்தர்களை அகற்றி வேத தர்மத்தைக் கைக்கொண்டான்.

பிறகு கேரளதேசத்தில் "காலடி" என்ற ஊரில் சிவகுரு என்ற அந்தணர் தர்மபத்னியான ஆர்யாம்பாளுடன் கூடி வெகுநாளாகப் புத்திரனுக்காகப் பகவானைப் பூஜித்து வந்தார். ஒரு நாள் இரவில் அவர் கனவில் ஓர் கிழப் பிராம்மணர் "உனக்கு என்ன வேண்டும்?" எனக்கேட்டதாகவும், தான் புத்ரனை வேண்ட, கிழவர் அல்பாயுளுள்ள பண்டிதன் வேண்டுமா? தீர்க்காயுளுள்ள மூடபுத்ரன் வேண்டுமா? என்றும் கேட்க, தான் அல்பாயுளுள்ள பண்டிதனையே வேண்டியதாகவும்

---

என நாம் கருதுவது போலாகும்.

பெரியோரிடம் அறிவித்தார். ''கனவில் வந்தவர் பகவான். உமக்கு நல்ல பிள்ளை பிறப்பான். அவரை அர்ச்சித்து அந்தணருக்கு அன்னமிட்டு சேஷத்தைப் புஜி '' என்று பெரியோர் சொல்ல, சிவகுரு அங்ஙனமே செய்தார். சிவன் அன்னத்தின் வழியாக ஆர்யாம்பாளின் கர்ப்பத்தில் செல்ல, அம்மாது கர்ப்பிணியானுள். முறையே பத்தாவது மாதத்தில் சுபதினத்தில் அத்யத்புதமான ஓர் குழந்தையைப் பெற்ருள். ஆகாயத்திலிருந்து தேவர்கள் இதைக் கண்டு களித்து புஷ்ப வர்ஷத்தை வர்ஷித்தனர்.

ப்ரும்மா, மண்டநமிஸ்ரராக அவதரித்து, தேவஸபையில் வேதமோதிய ரிஷியின் தவறுதலைக் கண்டு நகைத்த பாபத்தினுல் பூமியில் '' உபய பாரதி '' என்ற பெண்ணுகப் பிறந்த ஸரஸ்வதியை மணந்து, கர்ம மார்க்கத்தைத் தழுவிவந்தார். இவ்வாறே மற்றும் சில தேவர் அவனியிலவதரித்தனர். சங்கரகுரு முதல் வயதிலேயே எல்லா எழுத்துக்களையும் கற்றுக்கொண்டு நான்கு வருஷத்திற்குள் வேதத்தைத் தவிர மற்றெல்லா கலைகளையும் எளிதில் அப்யஸித்தார். இவரது தந்தை முற்றிலும் தன் குழந்தையின் குணத்தைக்கண்டு களிக்கமுடியாமல் காலகதியடைந்தார். ஆர்யாம்பாள் விதிப்படி புத்ரனைக்கொண்டு அவருக்குச் செய்யவேண்டிய உத்தரக்ரியைகளைச் செய்து முடித்தாள். பந்துக்களின் ஸஹாயத்தால் ஐந்தாவது பிராயத்தில் சாஸ்த்ரப்படி குழந்தைக்கு உபநயநம் செய்து குருகுலத்திற் கனுப்பினுள். குரு இரண்டு மூன்று மாதங்களுக்குள் ஸகல வேதவித்யைகளையும் உணர்ந்து தனது குருவிற்கும் ஸந்தேகங்களை நீக்கத்தக்க அளவு அவ்வளவு அறிவு பெற்ருர்.

ஒரு நாள் குரு பிக்ஷைக்காக ஓர் ஏழை வீட்டிற்குச் செல்ல அவ்வீட்டுப் பெண்மணி, ஐயோ! இக்கண்மணிக்கு பிக்ஷையிட ஒன்றுமில்லையே ! மஹா பாவியான நான், இல்லையென்று எப்படிச் சொல்வேன் ? '' என்றழுதாள். ஆசார்யர் எது இருந்தாலும் கொடுங்கள் என்று கூற, உப்பு நீரிலூரிய ஓர் நெல்லிக்கனியை அவள் அளித்தாள். அதைத் தின்று நீரருந்தி லக்ஷ்மீ தேவியைத் துதித்தார்.

---

**நம் ஆசாரத்தை பின் பற்றுவாரா? நம் புத்ரர்.**

ஸ்ரீதேவி எதிரில் தோன்றி, "உமது கருத்தை அறிவேன்! பூர்வ ஜன்மத்தில் செய்த பாபத்தின் பலனை ஏழையாயிருந்து அநுபவிக்கும் இவளுக்கு யானெப்படி ஸம்பத்தை அளிப்பேன்?" என்றாள். குரு 'தற்சமயம் எனக்களித்த தானத்தின் பலனை யளி' என்றார். உடனே அவ்வீடு தங்க நெல்லிக் கனிகளால் நிறைந்தது. அதைக் கண்டு ஆச்சரியப்பட்ட பெரியோர்கள் இவரது குணத்தையும், குரு பக்தியையும், விநயத்தையும், புத்தியையும் மிகக் கொண்டாடினார்கள்.

ஏழாவது வயதில் குரு குருகுலத்திலிருந்து திரும்பினார். ஒரு நாள் தாய் ஸ்நானஞ்செய்ய ஆற்றிற்குச் சென்று நடு வழியில் ஸூர்யதாபம் ஸஹியாமல் கீழே விழுந்தாள். அதை அறிந்த ஆசாரியர் அன்னையை ஆச்வாசப்படுத்தி கங்கையைத் துதித்து அந்நதியைத் தன் வீட்டிற்கருகில் வரும்படிச் செய்தார். இத்தகைய சக்தி பெற்ற குருவைத் தர்சிக்க கேரளராஜனும் மஹர்ஷிகளும் வந்தார்கள். அநேக பண்டிதர்கள் இவரிடம் வந்து படித்தார்கள். சங்கரகுரு தாயை நமஸ்கரித்து தான் ஸன்யாஸம் செய்துகொள்ள உத்திரவளிக்கும்படி வேண்டினார். "கணவனை யிழந்த எனக்கு நீதான் சரணம். அநாதையாக என்னை விட்டுவிட்டு நீ ஸன்யாஸம் செய்துகொள்ளலாகாது" என்று தாய் மறுத்தாள். பிறகு ஒரு நாள் ஸ்நானம் செய்ய அருகிலுள்ள நதியில் அவர் இறங்கினார். அவர் காலை ஒரு முதலை பிடித்திழுக்கவே, தாய் கதறி அழுதாள். "அன்னையே! வீணாகச் சாகும் எனக்கு ஸன்யாஸத்திற்கு உத்திரவளித்தால் ஒரு ஸமயம் பிழைக்கலாம்!" என்று குரு சொன்னார். அவளும் பிள்ளை பிழைத்தாற் போதுமென்று உத்திரவளித்தாள். குரு மாநஸிகமாக ஸந்யாஸம் செய்துகொண்டவுடன் முதலை காலை விட்டது. குரு தாயின் ஆபத்காலத்தில் தான் வருவதாகச் சொல்லி விடைபெற்று ஒவ்வொரு ஊராகத் தாண்டி, ஸ்ரீ கோவிந்த யோகீந்த்ரருடைய ஆச்ரமஞ் சென்று அவரைத் துதித்தார். அதைக் கேட்ட கோவிந்தர் ஆஹா! வந்துவிட்டான் தக்க சிஷ்யன்! இவன் மூலமாகத்தான் தத்துவோபதேசஞ் செய்து உலக நன்மை

---

செய்யவேண்டுமெனக் கருதி, அவருக்கு உபநிஷத் ரஹஸ்யங்களை உபதேசித்தார். சங்கரர், தன் குருவின் உபதேசத்தைப் பெற்று அவருக்குப் பணிவிடை செய்துவந்தார். ஒரு நாள் அதிக மழையினால் பெருத்த வெள்ளம் வந்து ஆஸ்ரமத்தை யழித்தது. மஹரிஷிகள் ஓடிவந்து கோவிந்த பாதரிடம் முறையிட அவர் குருவைப் பார்த்தார். அக்குறிப்பை யறிந்து சங்கரர் தனது மந்த்ர பலத்தால் அவ்வெள்ளத்தைத் தடுத்தார். பிறகு தனது குருவின் கட்டளைப்படி பிரும்ம ஸூத்ரத்திற்கும், உபநிஷத்துகளுக்கும், கீதைக்கும் பாஷ்யமெழுதி காசிக்குச் சென்று பல சிஷ்யர்களுக்கு அதை உபதேசித்தார்.

ஒரு ஸமயம் குரு சிஷ்யர்களுடன் கங்கைக்குச் செல்லும் வழியில் ஒரு சண்டாளனைக் கண்டு 'விலகு' என்றார். அவன், "ஆத்மாவுக்குத் தீட்டுண்டோ? யாரை என் விலகச்சொல்கிறீர்?" என்றான். அதைக் கேட்டு குரு ஆத்ம தத்துவத்தை யுணர்ந்தவன் எவனாயிருந்தாலும் எனக்கு அவன் குரு என்று "மநீஷா பஞ்சகம்" என்ற ஐந்து ஶ்லோகங்களைச் சொன்னார். எதிரிலுள்ள சண்டாளன் மறைந்து, வ்ருஷபாரூடராக பார்வதி ஸமேதராகத் தோன்றி மறைந்தார். ஸநந்தனர் என்ற ஒரு சிஷ்யன் ஸம்ஸாரக் கடலைத் தாண்டி வைக்கும் குரு பக்தி இக்கங்கையைத் தாண்டி வைக்காதோ? என்று தைர்யமாகக் கங்கையில் இறங்கிவிட்டான். இவனது குருபக்தியைக் கண்டு மகிழ்ந்த கங்கை பொற்றாமரைகளை இவனடியின் கீழ் வைத்து மெதுவாகக் கரைக்குக்கொண்டுபோய் விட்டுவிட்டாள். இதைக்கண்டு ஸந்தோஷித்த குரு அவனை "பத்மபாதா" என்று அழைத்தார். ஒருநாள் குரு சிஷ்யர்களுக்குப் பாஷ்யபாடம் நடத்தும் பொழுது ஒரு கிழவர் குருவுடன் வாதம்செய்ய ஆரம்பித்தார். எட்டு நாட்களாகியும் ஒருவருக்கும் ஜயாபஜயம் உண்டாகவில்லை. பத்மபாதர் குருவை வணங்கி, "சங்கரரான தங்களுக்கும், விஷ்ணுவான வ்யாஸருக்கும் வாதம் நேர்ந்தால் யார் ஸமாதானம் செய்வது? என்று சண்டை முடிவது?" என்றார். உடனே வ்யாஸர் தமது நிஜரூபத்தைக் காண்பித்து, அவர் பாஷ்யத்தை ஶ்லாஹித்தார். குரு அவர்

---

முன்னிலையிலேயே சரீரத்தை விடவிரும்பினர். ஆனால் வ்யாஸர் "என் விருப்பப்படி பிரும்மாவின் கட்டளைக் கிணங்கி இன்னும் பதினறு வயது இருந்து அத்வைத மதத்தை நிலைநாட்டு" என்று சொல்லி மறைந்தார்.

பிறகு ஒரு யாத்ரை செய்யும்பொழுது, "பட்டபாதர் என்ற வித்வான்" தம் குரு மனம் ஆயாஸப்படும்படி தாம் செய்த பாபத்திற்கும் ப்ராயச்சித்தமாக, ஓர் குழியில் உமியை நிரப்பி அதில் தீயிட்டு அத் தீயில் தாம் நின்று உயிரை விடுகிறார்" என்று கேள்விப் பட்டு அவ்விடம் வந்தார். பாதியுடல் வெந்திருந்தும் குருவைக் கண்டு அவர் ஸந்தோஷித்து உபசரித்தார். குரு, "உம்மை மந்திரபலத்தால் பிழைக்கும்படி செய்கிறேன். என் பாஷ்யத்திற்கு ஓர் வ்யாக்யானம் எழுதும் என்றார். பட்டர் என் சிஷ்யனை மண்டநமிஸ்ரனை ஜயித்து அவனை எழுதச் சொல்லுங்கள். எனக்கு தத்துவோபதேசஞ் செய்து நற்கதியை அளியுங்கள்" என்றார். அவ்வாறே குரு உபதேசஞ் செய்தார்.

அதன் பிறகு மாஹிஷ்மதீ என்ற பட்டணத்திற்குச் சென்று "ஸ்வத: ப்ரமாணம்" என்று பேசிக்கொண்டிருக்கும் கிளிகளைப் பார்த்து இதுதான் மண்டனர் வீடென அறிந்து அங்கே சென்றார். அன்று மிஸ்ரர் தம் மஹிமையால் வேதவ்யாஸரையும் ஜைமினியையும் அழைத்து பித்ருக்களாக வரித்து பூஜை செய்து கொண்டிருந்தார். குரு கதவைத்தட்டியும், அவர் கர்ம காலத்தில் ஸன்யாஸியைப் பார்க்கலாகாதென்று கதவைத் திறக்கவில்லை. ஆதலால் குரு யோகஶக்தியால் ஆகாயத்தில் பறந்து முற்றத்தில் வந்து இறங்கினர். அதைக்கண்ட மிஸ்ரர் கோபங்கொண்டு குருவைச் சில கடுமொழிகளால் தாக்கினர். ஆசார்யர் அம்மொழிகளைக் கொண்டே வேடிக்கையாக அவரைத் தாக்கினர். வ்யாஸர், "தக்ககாலத்தில் வந்த ஸந்யாஸியை விஷ்ணுவாக எண்ணிப் பூஜி" எனக் கூற, மிஸ்ரர் அப்படியே செய்தார். சங்கரர் "இந்த பிக்ஷை எனக்கு வேண்டாம், வாதபிக்ஷை யளியும்" என்றார். இருவரும் மறுநாள் உபயபாரதி என்ற மிஸ்ரர்

---

மனைவியை மத்யஸ்தராக நியமித்து "மிஶ்ரர்தோற்றால் குருவுக்கு சிஷ்யனாகி ஸன்யாஸஞ் செய்துகொள்வது; குரு தோற்றால் ஸந்யாஸத்தைவிட்டு மிஶ்ரருக்கு சிஷ்யனாவது" என்ற பந்தயம் வைத்துக்கொண்டு வாதத்திற்கு ஆரம்பித்தார்கள். உபயபாரதி இருவர் கழுத்திலும் மாலையணியச் செய்து தன் வேலைக்குச் சென்றாள். இவ்வாதத்தைக் கேட்க பலர் பூமியிலும் ஆகாயத்திலும் சூழ்ந்தனர். பலநாட்கள் ஒருவரையொருவர் ஜயிக்க வெகு யுக்தியுடன் வாதஞ்செய்தனர். முடிவில் மிஶ்ரர் கழுத்துமாலை கறுத்தது. அவர் தோற்கவே பாரதியன்று இருவரையும் பிக்ஷைக்கு அழைத்தாள்.

ஸரஸ்வதீதேவி தன்னுலகிற்குக் கிளம்ப, ஆசார்யர் மந்த்ர பலத்தால் பூலோக நன்மைக்காக அவளை இங்கேயே நிறுத்தினார். மிஶ்ரர் தோற்றாலும் தமது கர்ம சாஸ்திரம் வீணாய் விடுமோவென்று கவலையடைய ஸ்ரீ ஜைமினி எதிரில் தோன்றி "ஞானம் வரும்வரை கர்ம சாஸ்த்ரம் முக்யம், ஞானத்திற்கு இது ஸாதனம்," என்று சொல்லி மறைந்தார். பின்னர் பாரதீ தன்னை ஜயிக்காமல் தன் கணவனை ஜயித்தது ஜயமாகாதென்று குருவை வாதத்திற்கழைத்தாள். அதிலும் ஸகல கலைகளிலும் கரைகண்ட குருவை ஜயிப்பது கஷ்டம். ஆதலால் அநுபவமுள்ள காமசாஸ்த்ரத்திலே வாதஞ் செய்யவேண்டும் என்றாள். குரு ஒரு மாதம் தமக்கு அவகாசங் கொடுக்கவேண்டுமென்றார். அவளும் ஸம்மதித்தாள். அச்சமயம் இறந்திருந்த அமருகன் என்ற அரசன் சரீரத்திற்குள் நுழைந்து தான் வருமளவும் தம்முடலைக் காத்திருக்கும்படி சிஷ்யர்களுக்குக் கட்டளையிட்டார். இறந்த அரசன் எழுந்ததைக் கண்ட அவன் மனைவிகளும், மந்திரிகளும் பேரானந்தம் கொண்டு முன்போலவரை அரசுபுரியும்படி வேண்டினர். இக்குருவரசர் ராஜ்யத்தை மந்திரிகளிடம் அளித்துவிட்டு தான் அந்தஃபுரத்திலுள்ள ராஜஸ்த்ரீகளுடன் ரமித்துக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் அமருகம் என்ற ஶ்ருங்கார புத்தகத்தை இயற்றினார். குறிப்பிட்ட காலங் கடந்தும் குரு வராததைக் கண்ட சிஷ்யர்கள் பாடகர் வேஷந் தரித்து அவ்வரண்மனைக்கு வந்து "உங்களது வேலையை

---

அடுத்த கட்டுப்பாட்டை மீற வழிகாட்டும்.

செய்ய வாருங்கள்'' என்று வ்யாஜமாகப்பாடி குருவை யழைத்தார்கள். இதனிடையில் ராஜபத்னி, '' யாரோ ஒரு யோகி தனது கணவன் சரீரத்தில் நுழைந்திருக்கிறார்.'' என்பதைப் பலகாரணங்களாலறிந்து, எங்கேனும் பிணங்கிடந்தால் அதை கொளுத்திவிடு என்று கிங்கரர்களை யனுப்பினாள். அவர்கள் குஹையில் சிஷ்யர்களால் காக்கப்பட்ட குருவின் உடலைப் பலாத்காரமாக தீயிலிட்டார்கள். ஆசார்யர் மறுபடியும் தம்முடலிற் புகுந்து அக்னிபாதை ஸஹிக்காமல் லக்ஷ்மீ ந்ருஸிம்ஹரை எட்டு ஸ்லோகங்களால் ஸ்துதித்தார். அத்தேவர் இவரை நெருப்பிலிருந்து மீட்டு விட்டார். ஸரஸ்வதி இவரைக் கண்டவுடன் தான் தோற்றதாக ஒத்துக்கொண்டாள். ஆசார்யரது மஹிமையைக் கண்டு ஸுரேஸ்வரர் என்ற வித்வான் குருவுக்கு சிஷ்யரானார். சிஷ்ய கணங்கள் சூழ குருவரர், மஹாராஷ்ட்ரம், ஸ்ரீ ஸைலம் முதலிய விடங்களுக்குச் சென்று ஆங்குள்ள துர்மதங்களைக் கண்டித்து அத்வைத வித்யையைப் போதித்தார்.

ஒரு ஸமயம் ஆசார்யரைக் கொல்ல வெண்ணிய ஓர் காபாலிகன் ஸாதுவேஷம் பூண்டு குருவை யணுகி ''ஐயா யான் இச்சரீரத்துடன் ஸ்வர்கம்செல்ல தங்களுடைய தலையைப் பரமசிவனுக்குப் பலியாகக் கொடுக்க தயை செய்யுங்கள்.'' என்று வேண்டினான். ஆசார்யர், '' நல்லது அப்படியே ஆகட்டும் நான் தனியாக ஸமாதியிலிருக்குபோது உன்னிஷ்டத்தைப் பெறுவாயாக'' என்றார். அப்படியே குரு ஸமாதியிலிருக்கும் பொழுது அத் தீயச்செயலைச் செய்ய அக் கொடியவன் அவரருகில் சென்றான். இதை யோகசக்தியால் அறிந்த பத்மபாதர் நரஸிம்ஹரைத் துதித்து தாமே நரஸிம்ஹராகி அக் காபாலிகனைக் கொன்று அவனுடலைக்கிழித்து மாலையாய் அணிந்து கொண்டு ஆவேசத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தார். இச் சப்தத்தைக் கேட்டு நிஷ்டையிலிருந்து கலைந்த சங்கரர் நரஸிம்ஹரை வணங்கித் துதித்தார். அவ்வுருவம் மறைந்தது. முன்போலவே பத்மபாதர் நடந்தவற்றைக் குருவிற்கு அறிவித்தார்.

---

**எந்த கட்டுபாடும் நம் நன்மைக்காகவே.**

கோகர்ணம் முதலிய க்ஷேத்ரங்களுக்குச் சென்று "ஹரியும் ஹரனும் ஒன்றே" என்று சிலபத்யங்களால் ஹரிஹரனைத் துதித்து, மூகாம்பாள் ஆலயஞ்சென்றூர். அங்கே இறந்த குழந்தையை மடியின்மீது வைத்துக்கொண்டு அழும் ஒரு பெண்மணியைப் பார்த்து அவள்பாற் கருணைக் கூர்ந்து அக் குழந்தையைப் பிழைப்பிக்கும்படி அம்பாளை வேண்டினூர். தூங்கி எழுந்ததுபோல அக் குழந்தை எழுந்து வர தாய் குருவையும் அம்பாளையும் பணிந்து வீடு சென்றூள். பிறகு ஸ்ரீ பலி என்ற ஊரில் ப்ரபாகரர் என்ற விப்ரர் வயது பதிமூன்ருகியும் பேசாமல் பைத்யம்போலிருக்கும் தம் குமாரனை ஆசார்யரிடம் அழைத்து வந்து பைத்யத்தை நீக்கும்படி வேண்டினூர். நீ யார் என்று குரு கேட்க அப்பாலன் உள்ளங்கை கனிப்போல் ஸகல வேதாந்த தத்துவங்களையும் கூறி 'யான் பரப்ருஹ்மம்' என்றூன். குரு ப்ரபாகரருக்கு வேறு பிள்ளை பிறப்பானென ஆசீர்வதித்து அச்சிறுவனுக்கு ஹஸ்தாமலகன் எனப் பெயரிட்டு அவனுடன் ஶ்ருங்ககிரி என்னும் இடத்திற்குச் சென்றூர். அங்கு அதிமனேஹரமான ஓர் தேவாலயம் கட்டி ஸ்ரீ சாரதா தேவியை ப்ரதிஷ்டை செய்தார். ஒருநாள் தோடகன் என்ற மாணவனுக்காக பாடம் நடத்தாமற் காத்திருந்தார். இதை ஸஹியாத பத்மபாதர் அம்மாணவனுக்காக ஏன் தாமஸிக்கவேண்டும் என்றூர். உடனே குரு தோடகருக்குப் பூர்ணுநுக்ரஹம் செய்தார். அந்த நிமிஷத்திலேயே மஹா வித்வானுகி அவர் தோடகம் என்ற விருத்தத்தால் குருவைத் துதித்தார். நான்கு வேதங்களைப் போல் நான்கு ஶிஷ்யர்களுக்கு இடையில் ப்ரும்மாவைப் போல் குரு ப்ரகாசித்தார்.

ஒரு நாள் மண்டந மிஶ்ரர் ஆசார்யரது பாஷ்யத்திற்கு ஓர் வார்த்திகம் எழுத உத்தரவு கேட்டார். மற்ற மாணவர்கள் "இவர் கர்ம சாஸ்த்ரத்தில் பற்றுள்ளவராதலால் அதை ஒட்டியே உரை யெழுதுவார். பிறப்பு முதல் தத்வக்ஞானமுள்ள ஹஸ்தாமலகர் எழுதுவது தான் நியாயம்" என்றூர்கள். சங்கரர் "ஹஸ்தாமலகர் இரண்டு வயது சிசுவாக இருக்கும் பொழுது இவர் தாய்

---

ஒரு பிள்ளை தந்தைக்கு கூழ்வார்த்தான்.

கரையிலுள்ள ஓர் ரிஷியிடம் இவரை விட்டுவிட்டு ஸ்நானஞ் செய்யத் தடாகத்திலிறங்கினள். மஹர்ஷி கண்மூடிக் கொண்டு தவஞ்செய்ய, குழவிதவழ்ந்து ஜலத்தில்விழுந்து இறந்தது. நிஷ்டையிலிருந்து கலைந்து ரிஷி குழந்தையின் சவத்தைக் கண்டு தாயிடம் சிசுவையளிக்க தான் அதிற் புகுந்து விட்டார். ஆதலால் இம்மாணவர் அன்று முதல் எல்லா வித்யைகளிலும் பண்டிதனானர்'' என்று அவர் பால்ய சரித்ரத்தைக் கூறி அவரும் ஓர் புஸ்தகம் எழுதட்டும். ஆனல் வார்த்திகத்தை மிஸ்ரரே எழுதவேண்டும் என்றார். இதற்கு மற்றவர் ஸம்மதிக்காததால் மிஸ்ரர் '' யார் வார்த்திக மெழுதினலும் அது ப்ரஸித்தமாகாது'' என சபித்துவிட்டு ''நைஷ்கர்ம்யஸித்தி'' என்ற புஸ்தகத்தை இயற்றினர்.

பிறகு ஜகத்குரு பத்மபாதரை தீர்த்தயாத்ரைக்கு அனுப்பி, தனதுதாய் அந்திய தசையிலிருப்பதையறிந்து ஆகாயமார்க்கமாய் விரைவில் வந்து தாயை வணங்கி '' நான் செய்ய வேண்டியது என்ன'' என்று கேட்டார். தாய் நற்கதியை ப்ரார்த்திக்க மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை யளிக்கும் தத்துவத்தை உபதேசித்தார். பரிபாக மின்மையால் அதை அவள் ஏற்க வில்லை. சிவனைத் துதித்து சிவலோகஞ் செலுத்த சிவகணங்களை யழைக்க, ஜடா, சூலவிபூதி ருத்ராக்ஷதாரிகளான அக் கணங்களைக் கண்டு பயந்தாள். உடனே ஶங்க, சக்ர கதா தாரிகளான விஷ்ணு, பக்தர்களை யழைத்து தெய்வ விமானத்தின் மீதேற்றி தாயை வைகுண்டத்திற்கு அனுப்பினர். தாம் தாய்க்குச் செய்யவேண்டிய தஹநம் முதலிய மறுமைக் காரியங்களுக்கு ஸஹாயம் செய்ய பந்துக்களை வேண்டினர். அவர்கள் ஸன்யாஸிக்கு கர்மாதிகாரம் கிடையாதென்று அக்னியையு மளிக்க மறுத்தார்கள். உடனே பகவான் அங்கேயே சிதையை யடுக்கி தாயின் சவத்தின் வலது கையிலிருந்து அக்னியைக் கடைந்தெடுத்து தஹநஞ் செய்தார். பின்னர் '' இன்று முதல் வேதபாட அநர்ஹர்களாகவும், வீட்டிலேயே ஸ்மஶானமுள்ளவர்களாகவும் ஆவீர்கள் '' என்று பந்துக்களுக்குச் சாபமிட்டார்.

---

அதைக் கவனித்து வந்தான் பிள்ளையின் பிள்ளை

பத்மபாதர் ஒவ்வொருக்ஷேத்ரமாகச்சென்று தர்சித்து காவேரி தீரத்தில் தன் மாமனைக் கண்டு களித்து அங்கேயே சிலநாள் தங்கி தத்வோபதேசஞ்செய்து தனது புஸ்தகங்களை அவரிடம் வைத்துவிட்டு ராமேஸ்வரம் சென்றார். மாமன் தன் கர்ம மார்க்கத்திற்கு விரோதமான பத்மபாதரது வேதாந்த நூல்களைத் தன் வீட்டுடன் நெருப்பு வைத்து எரித்துவிட்டார். திரும்பி வந்தபத்மபாதர் இதை கேட்டு மிக்க துக்கமடைந்து மற்றோர் க்ரந்தம் எழுத ஆரம்பித்தார். இதைக்கண்டு அஸூயைகொண்ட இவர் மாமன் அவர் புத்தியோட்டத்தைத் தடுக்கும்படி ஓர் மருந்தை அன்னத்துடன் சேர்த்துக் கொடுத்துவிட்டார். அதனால் ஒன்றும் தெரியாமல் திக்ப்ரமை கொண்டிருக்கும் பாதரை அவருடன் படித்த ஸகாக்கள் அழைத்துக்கொண்டு ஆசாரியரைத் தேடிச் சென்றார்கள். கேரள தேசத்தில் ஜகத் குருவைக் கண்டு பாதருக்கு நேர்ந்த கஷ்டத்தை யறிவித்தார்கள். பாதரும் தமது க்ரந்தத்தைப்பற்றி ஆராத் துயரமடைந்தார். உடனே குரு தான் முன்கேட்டபடியே அதைச் சொல்ல, பத்ம பாதர் மிக்க ஸந்தோஷத்துடன் எழுதிக்கொண்டார். இப்படியே கேரள ராஜனும் தானிழந்த மூன்று நாடகங்களையும் குரு மூலமாகவே அறிந்து கொண்டான்.

பல்லாயிரக்கணக்கான சிஷ்யர்கள் படைசூழ குருவீரர் திக்விஜயம் செய்ய ராமேஸ்வரஞ் சென்று ஆங்குள்ள ஶாக்தர்களை ஜயித்து காஞ்சி நகரம் சென்றார். அங்கே ஒரு அழகிய தேவாலயம் நிர்மாணித்து அம்பாளை அர்ச்சித்தார். வெங்கடாசலம், ஆந்த்ரம், விதர்ப்பம் இவைகளைத் தாண்டி காபாலிகர் நிறைந்த கர்நாடக தேசத்திற்கு ஸுதந்வா என்ற அரசனுடன் சென்றார். வாதத்தில் தோற்ற காபாலிகர்கள் ஆயுதந்தாங்கி சங்கரரது சிஷ்யர்களைத் தாக்கினார்கள். கோபங்கொண்ட ஸுதந்வா அவர்களை எதிர்க்க பெரிய யுத்தம் செய்தான். தம்முடைய சிஷ்யர்கள் மாளுவதைக்கண்டு சங்கரர் தம் கோபாக்னியால் சத்ருக்களைச் சாம்பலாக்கினார். காபாலிக குருவான க்ருகச என்பவன் தனது இஷ்ட தேவதையை உபாஸித்து பயங்கரமான ஓர் பூதத்தை, சங்கரரைக் கொல்ல

---

தாத்தாவுக்கு அளித்த பாத்ரத்தைப் பதுக்கினான்.

ஏவினன். அப் பூதம்" என்னைக் கொல்ல என்னையே ஏவுகிறாயா?" என்று கோபங்கொண்டு க்ருகசனைக் கொன்றது. மற்றுமுள்ள குமதிகளை ஜயித்து லோககுரு மேற்கு ஸமுத்ரகரைக்குப் போனார். அங்கு மஹா ப்ரஸித்தரான நீலகண்ட சிவாசார்யர் என்பவர் ஆசார்யருடன் வெகு நாள் வாதஞ் செய்து தோற்று சங்கரர் சிஷ்யரானார். உதயனர் முதலிய கவீந்த்ரர்களும் குருவின் மஹிமையைக் கண்டு வியந்தனர். ஸௌராஷ்ட்ரம், த்வாரவதி முதலிய இடங்களுக்குச் சென்று நாஸ்திகர்களை ஜயித்து அத்வைத வித்யையை நிலைநாட்டினர்.

ஒரு ஸமயம் ஒரு நாஸ்திகன் " அபிநவகுப்தன் " என்ற பெயருடன் ஒரு சிஷ்யனைப்போல் குருவினிடந் தங்கி ஆபிசார ப்ரயோகம் செய்து நீங்காத வயிற்று நோயைக் குருவுக்கு கற்பித்து விட்டான். குரு பக்தர்கள் பல இடங்களிலிருந்து வைத்ய நிபுணர்களை யழைத்து வந்தும் வியாதி நீங்கவில்லை. கர்மாவினால் வரும் பிணியை அநுபவித்தே தீரவேண்டுமென குரு நிச்சயித்தாலும் நோய் பொறுக்கமாட்டாமல் கடவுளைத் துதித்தார். பகவானால் அனுப்பப்பட்ட அஶ்வினீ தேவர்களென்ற தேவ வைத்யர்கள், அந்தணருருவம்தாங்கி " ஐயனே மந்த்ர பலத்தாலுண்டான வ்யாதி மந்த்ரத்தாலேயே நீங்க வேண்டும். இவன் தான் இக்கொடிய நோயை உமக்கு அளித்தவன்." என்று அபிநவகுப்தனைக் காண்பித்து மறைந்தார்கள். பத்மபாதர் கருணாமூர்த்தியான சங்கரரால் பல முறை தடுக்கப்பட்டும் கேளாமல், மந்த்ர சக்தியால் அதே நோயைக் கொண்டு குப்தனைக் கொன்று விட்டார். பின்னர் சங்கரர், கௌடபாத ரென்ற தமது பரம குருவை வணங்கி தன் பாஷ்யத்தைக் காண்பித்தார். அப்பெரியார் அதை ஆமோதித்து பத்து உபநிஷத்துகளில் ஒன்றான மாண்டூக்ய உபநிஷத்தின் பாஷ்யத்திற்கு " கௌடபாத காரிகை " என்ற ஓர் உரையை இயற்றினார். காஷ்மீர தேசத்தில் ஸர்வக்ஞரான ஓர் மஹா புருஷனால் அடையத்தக்க ஓர் ஸர்வக்ஞ பீடம் பொருந்திய சாரதாலயத்திற்குச் சென்றார். அவ்வாலயத்தின் ஒவ்வொரு வாசற்படியிலும் பல மதத்தினர் பல சாஸ்த்ரங்

---

**எங்கே பாத்ரம் என தந்தையைக் கடிந்தான்.**

களில் அநேக கேள்விகளைக் கேட்டனர். ஒவ்வொருவரும் ஆச்சர்யப்படும்படி தக்க பதிலுரைத்து அப்பீடத்திலேறி சில நாள் தங்கினார். மற்ற இடங்களிலும் சில மடங்களை ஸ்தாபித்து ஸுரேஸ்வரர் முதலிய சிஷ்யர்களை அங்கு ஆசார்யராக வைத்தார். சில முக்ய சிஷ்யர்களுடன் தாம் பத்ரிகாஸ்ரமம் சென்றார். அதற்குள் முன் தேவர்கள் கேட்டுக்கொண்டபடி ஸகல அவைதிகமதங்களையும் நாஸ்திக மதங்களையும் கண்டித்து அத்வைத மதத்தை நிலை நாட்டினார். தர்மம் தலை தூக்கி நின்றது. அதர்மம் ஒழிந்தது. ஆஸ்திகவாதம் செழித்தது, நாஸ்திகம் அகன்றது. மந்தாதிகாரிகளுக்குத் தக்கபடி, ஸைவம், வைஷ்ணவம், ஸாக்தம், ஸௌரம், காணபதம், காபாலிகம் என்ற ஆறு மதங்களைச் சீர்திருத்தி ஷண்மத ஸ்தாபநம் செய்தார். அநேக ஸ்தோத்திர க்ரந்தங்களை இயற்றினார். தனது வேலைகளை முடித்தவுடன் முப்பத்திரண்டாவது வயதில் ப்ரும்மா விஷ்ணு முதலிய தேவர்கள் தெய்வ விமானத்திலேறிவரும்படி அழைக்க சங்கரபகவான், தன் கைலாஸ கிரிக்குச் சென்றார்.

முற்றிற்று.

---

## ஸ்ரீ தோடகாசார்யர் செய்த குரு ஸ்துதி.

1 விதி³தாகி²ல ஸாஸ்த்ரஸுதா⁴ஜலதே⁴
மஹிதோபநிஷத்கதி²தார்த²நிதே ।
ஹ்ருத³யே கலயே விமலம் சரணம்
ப⁴வ ஸங்கர தே³ஸிகமே ஸரணம் ॥

2 கருணா வருணாலய பாலயமாம்
ப⁴வ ஸாக³ர து:³க² விதூ³நஹ்ருத³ம் ।
ரசிதாகில தர்ஸன தத்வவித³ம்
ப⁴வஸங்கர தே³ஸிகமே ஸரணம் ॥

3 ப⁴வதா ஜனதா ஸுஹிதா ப⁴விதா
நிஜபோ³த⁴ விசாரண சாருமதே ।
கலயே ஸ்வரஜீவ விவேகவித³ம்
ப⁴வஸங்கர தே³ஸிகமே ஸரணம் ॥

---

4 ப$^4$வ ஏவ ப$^4$வானிதி மேநிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகதா ।
மமவாரய மோஹ மஹாஜலதி$^4$ம்
ப$^4$வஶங்கரதே$^3$ஶிகமே ஶரணம் ॥

5 ஸுக்ருதே தி$^4$க்ருதே ப$^3$ஹுதா$^4$ ப$^4$வதோ
ப$^4$விதாபத$^3$த$^3$ர்ஶன லாலஸதா ।
அதிதீனமிமம் பரிபாலயமாம்
ப$^4$வஶங்கர தே$^3$ஶிகமே ஶரணம் ॥

6 ஜகதீ மவிதும் கலிதாக்ருதயோ
விசரந்தி மஹாமஹஸ ஶ்ச$^2$லத: ।
அஹிமாம்ஶு ரிவாத்ர விபா$^4$ஸி புரோ
ப$^4$வஶங்கரதே$^3$ஶிகமே ஶரணம் ॥

7 கு$^3$ருபுங்க$^3$வ புங்க$^3$வ கேதநதே
ஸமதாமயதாம்நஹி கோபிஸுதீ$^4$: ।
ஶரணாக$^3$த வத்ஸல தத்வநிதே
ப$^4$வஶங்கர தே$^3$ஶிகமே ஶரணம் ॥

8 விதி$^3$தா நமயா விஶதை$^3$ககலா
நசகிஞ்சன காஞ்சன மஸ்திகு$^3$ரோ ।
த்ரு$^3$தமேவ விதே$^4$ஹி க்ருபாம் ஸஹஜாம்
ப$^4$வஶங்கர தே$^3$ஶிகமே ஶரணம் ॥

**தோடகாசார்யாஷ்டகம் முற்றிற்று.**

---

## விகாரி வருஷம் சித்திரைமாஸ விசேஷ விரதம்.

**வஸந்தருது: சித்திரைமீ 1௳** நவக்ரஹ பூஜைசெய்து அவரவர் குலக்ரமமாக அநுஷ்டானத்திலுள்ள பஞ்சாங்கத்தைப் படிக்க வேண்டும். நவக்ரஹ அருளால் ஸகல பாக்யமும் உண்டாகும்.

ராஜா-குரு, மந்திரி-அங்காரகன், ஸேநாதிபதி-சந்த்ரன், ஸஸ்யாதிபதி-குரு, தான்யாதிபதி-புதன், அர்க்காதிபதி-சந்த்ரன், ரஸாதிபதி-சனி, நீரஸாதிபதி-குரு, மேகாதிபதி-சந்த்ரன். பொதுவாக இவ்வாண்டு ஸுபிக்ஷமாக இருக்கும்.

1௳ வருஷப்பிறப்பு புண்யகால தர்ப்பணம், 4௳ ஸ்ரீராமநவமி, 10௳ சித்ரகுப்த பூஜை, 29௳ ஸ்ரீ சங்கர ஜயந்தி.

---

பிதா, உனக்கேதுக்கடா அந்த எச்சில் பாத்ரம்

# சாந்தி விலாஸம்.

(கணபதி தீக்ஷிதர்.)

25. यत्तामिस्रे नरक कुहरे यद्बहि श्चक्रवालात्
यत्पाताळे यदपि धरणौ वार्षिकीसु क्षपासु ।
रूढं गाढं तम इति समस्तं च तच्चिन्त्यमानं
नास्माकान्तः करणतमसो दासभावेऽपि योग्यम् ॥

யத்தாமிஸ்ரே நரக குஹரே யத்ப$^{3}$ஹிஶ் சக்ரவாலாத்
யத்பாதாளே யத$^{3}$பி த$^{4}$ரணௌ வார்ஷிகீஸு க்ஷபாஸு |
ரூட$^{4}$ம் க$^{3}$ாட$^{4}$ம் தம இதி ஸமஸ்தம்ச தச்சிந்த்யமாநம்
நாஸ்மா காந்த: கரணதமஸோ த$^{3}$ாஸப$^{4}$ாவே பியோக$^{3}$யம் ||

தாமிஸ்ரமெனும் நரகத்திலும் சக்ரவாளம் எனும் பூமண்டல எல்லைக்கு வெளியிலும் பாதாளத்திலும் பூமியில் மழைக்கால இரவுகளிலும் இருள் மிக த்ருடமாக இருக்கின்றன. நினைத்துப் பார்த்தால் அவைகள் நமது மநதிலுள்ள அக்ஞாந இருளுக்குத் தொண்டு செய்யக்கூட யோக்யதை இல்லாதவைகளாகும். அவ்வளவு த்ருடமான இருளைப் போக்கடியும் சிவனே!

26. सर्वानर्थ प्रथम करणे सर्वभावै र्जिहास्ये
देहे मोहो यदि परिणतः पोषणीयो मयेति ।
आस्तामेवं वपुरिद मिवागामि चास्माकमेवे
त्येषाप्यास्तां मतिरितिपरं धर्मशास्त्रेषु घोषः ॥

ஸர்வாநர்த$^{2}$ ப்ரத$^{2}$மகரணே ஸர்வப$^{4}$ாவைர் ஜிஹாஸ்யே
தே$^{3}$ஹே மோஹோ யதி$^{3}$பரிணத: போஷணீயோமயேதி |
ஆஸ்தாமேவம்வபுரித$^{3}$மிவாக$^{3}$ா மிசாஸ்மாகமேவே
த்யேஷாப்யாஸ்தாம் மதிரிதிபரம் தர்மஶாஸ்த்ரேஷு கோஷ:

நமது உடல்தான் ஸர்வ அநர்த்தங்களுக்கும் காரணம். எந்த வகையாக யோசித்தாலும் உடல் எடுக்கவே கூடாது. அத்தகைய உடலைப் போஷிக்க வேண்டுமென மோஹம் உண்டாகிவிட்டது. அது இருக்கட்டும். அப்படியே நமக்கே இன்னும் எத்தனையோ உடல் உண்டாகப்போகிறது என்று சற்று நினை என ஶாஸ்திரங் கூறுகிறது. வரப்போகும் உடலும் நல்லதாக இருக்க வேண்டும்.

அவைகளையும் ரக்ஷிப்பதிலேயே ஊக்கத்துடனிருந்தால் உடல் உண்டாகாமலிருக்க எப்பொழுது வழி தேடுவது?

27. कामीकामत्रण परिगतः कामिनीरेव हित्वा
भुङ्क्ते पश्चादपगतभयं कामिनीनां सहस्रम् ।
इत्थंकारं विषयसुख भोगैक तानैर्नरैः —
अप्यस्मिन्देहे कतिपय दिनान्येष भोगो विवर्ज्यः ॥

காமீகாம வ்ரண பரிக3த: காமிநீரேவ ஹித்வா
பு4ங்த்தே பஶ்சாத பக3தப4யம் காமிநீநாம் ஸஹஸ்ரம் ।
இத்த2ங்காரம் விஷயஸுக2போ4கை3க தானைர்நரை: —
அப்யஸ்மின்தே3ஹே கதிபய தி3நாந்யேஷ போகோவிவர்ஜ்ய:

காமமென்பது ஓர் நோய். அதனால் பீடிக்கப்பட்டவன் காமினிகளைச் சிறிதுகாலம் விட்டுவிட்டு பயமின்றி ஸ்வர்க்கத்தில் ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளை அனுபவிக்கிறான். இப்படி விஷய ஸுகத்தை அநுபவிப்பதில் பேரவா கொண்டவன் இந்த உடலின் கூட சிறிது காலம் போகத்தை விடத்தான் வேண்டியிருக்கிறது. ஸ்வர்க்கம் செல்வதற்காக நியமத்தைக் கைக்கொண்டு போகத்தை விடுபவன் எப்போதுமே போகத்தை விட்டால் பேரானந்தம் பெறலாம்.

28. न्याय्या दर्थादपि किमधिकं लभ्य मुन्मार्गवृत्या
वैधा दन्नादपि किमधिकं पर्युदस्तेषु भोज्यम् ।
भार्या भोगादपि भवति कः पण्यकान्तासु लाभः
प्रायो नेतिश्रुतिविषयता विश्वामाधुर्य हेतुः ॥

ந்யாய்யாத3ர்தாத3பி கிமதி4கம் லப்4யமுன் மார்க3வ்ருத்யா
வைத4ாத3ந்நா த3பி கிமதி4கம் பர்யுதஸ்தேஷு போ4ஜ்யம்
பார்யாபோ4க3ாத3பி ப4வதிக: பண்யகாந்தாஸு லாப4:
ப்ராயோ நேதிஶ்ருதிவிஷயதா விஶ்வாமாது4ர்யஹேது: ॥

நியாய வழியால் தேடியதை விட அநியாய வழியால் வந்த பொருள் எப்படிச் சிறந்தது? ஶாஸ்த்ரம் விதித்த அன்னத்தைவிட இதைச்சாப்பிடாதே என்று தடுத்ததில் என்ன சிறப்பு. தர்மபத்னியிடம் அனுபவிப்பதைவிட தாஸியிடம் என்னமேன்மையிருக்கிறது? பெரும்பாலும் வேதம் வேண்டாமென்ற விஷயத்திலேயே உலகிற்கு ருசி ஏற்படுகிறது.

---

தந்தை நின்று ஜலங்கழித்தால் அதைப் பார்த்த

# ஸாமவேத ஸமிதாதானம்.

ஶுக்லாம் ப³ரத⁴ரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோப ஶாந்தயே ॥

ஓம் பூ⁴:.......பூ⁴ர்பு⁴வஸ்ஸுவரோம் ॥ மமோபாத்த......
ப்ரீத்யர்த்தம் யக்ஞேஶ்வர ப்ரீத்யர்த்த²ம் ப்ராதஸ்ஸமித³ா
த⁴ாநம் கரிஷ்யே ॥ (காலே) ஸாயம் ஸமிதாதாநம் கரிஷ்யே
(மாலே) ஜலத்தைத் தொட்டு.

அக்நியை பரிஷேசனம் செய்யவேண்டும் :-

**देवसवितः प्रसुव। यज्ञं प्रसुव। यज्ञपतिं भगाय दिव्यो गन्धर्वः केतपूः केतन्नः पुनातु। वाचस्पतिर्वाचन्नः स्वदतु।**

தே³வஸவித: ப்ரஸுவ। யக்ஞம் ப்ரஸுவ। யக்ஞ பதிம்ப⁴க³ாய தி³வ்யோ க³ந்த⁴ர்வ: கேதபூ: கேதந்ந: புநாது। வாசஸ்பதிர்வாசந்ந: ஸ்வத³து ॥ ஐந்து ஸமித்து களை எடுத்துக்கொண்டு

**अग्नये समिधमाहार्षं बृहते जातवेदसे यथात्वमग्ने समिधा समिध्यसे॥ एवं मामायुषा वर्चसा मेधया प्रजया पशुभिः ब्रह्म वर्चसेन धनेन अन्नाद्येन समेधिषीय स्वाहा॥ अग्नय इदं नमम॥**

அக்³நயே ஸமித⁴மாஹார்ஷம் ப்³ருஹதே ஜாதவேத³ ஸே யத²ாத்வமக்³நே ஸமித⁴ா ஸமித்⁴யஸே ॥ ஏவம் மாமா யுஷா வர்சஸா மேத⁴யா ப்ரஜயா பஶுபி⁴: ப்³ரஹ்ம வர்ச ஸேந த⁴நேந அந்நாத்³யேந ஸமேதி⁴ஷீய ஸ்வாஹா ॥ அக்³நய இத³ம் நமம ॥

**भूः स्वाहा** பூ⁴:ஸ்வாஹா அக்³நய இதம் நமம **भुवः स्वाहा** பு⁴வஸ்ஸ்வாஹா. வாயவ இத³ம் நமம **स्वः स्वाहा** ஸ்வ: ஸ்வாஹா. ஸூர்யாயேத³ம் நமம **ॐ भूर्भुवस्स्वस्वाहा** ஓம் பூ⁴ர்பு⁴வஸ்ஸ்வ ஸ்வாஹா ப்ரஜாபதய இத³ம் நமம ॥
மறுபடியும் அக்கினியை பரிஷேசனம் செய்யவேண்டியது.

தே³வஸவித: ப்ராஸாவீ: யக்ஞம் ப்ராஸாவீ: யக்ஞ பதிம்ப⁴க³ாய தி³வ்யோ க³ந்த⁴ர்வ: கேதபூ: கேதந் நோபா

---

பிள்ளை ஓடிக்கொண்டே ஜலங்கழிப்பான்.

வீத் வாசஸ்பதிர் வாசந்நோ ஸ்வாதி³த் ॥
**वामदेव्यम्** வாமதே³வ்யம் ॥

**काया । नश्चा इत्रा आभुवात् । ऊ । तीसदा वृधस्सखा । औ हो हा इ । कया श चाई । ष्ट यौ हो हीम्मा । वा तों हा इ ॥ का स्त्वा । सत्यो मादा नाम् । मा हिष्ठो मा त्सा दन्ध । सा औ हो हा इ । दढा चिदा । रु जौ हो । हीम्मा । वा सो हा इ । आभी । षु णा स्सा खी नाम् । आ । विता ज रा इ तृणाम् । औ हो हा इ । श तां भवा । सि यौ हो । हीम्मा । ता यो हा इ ॥** ஸ்வாஹா உபஸ்தானம் கரிஷ்யே ॥ அக்னயே நம:

காயா । நஶ்சா இத்ரா ஆபு⁴வாத் । ஊ । தீஸதாவ்ருத⁴: । ஸ்ஸக²ா । ஔஹோஹாஇ । கயாஶசாஈ । ஷ்டயௌஹோ । ஹிம்மா । வார்த்தோ । ஹாஇ । காஸ்த்வா ஸத்யோ மாத³ானும் । மாஹிஷ்டே²ா மாத்ஸாத³ந்த⁴ । ஸா ஔஹோ ஹாஇ । த்³ருட⁴ா சித³ா । ருஜௌஹோ । ஹீம்மா । வாஸோஹாஇ । ஆபீ⁴ । ஷுணு ஸ்ஸாகீ² நாம் । ஆ । விதா ஜரா இ த்ருணும் । ஔஹோஹாஇ । ஶதாம் ப⁴வா । ஸியௌஹோ । ஹீம்மா । தாயோஹாஇ ॥

மந்த்ரஹீனம் க்ரியாஹீனம் ப⁴க்திஹீனம் ஹுதாஶந ।
யத்து⁴தந்து மயாதே²வ பரிபூர்ணம் தத³ஸ்துதே ।
ப்ராயஶ்சித்தான்ய ஶேஷாணி தப:கர்மாத்மகானிவை ।
யானிதேஷாம் அஶேஷாணும் க்ருஷ்ணுநுஸ் மரணம்பரம் ॥
எனக் கூறி நமஸ்காரம்.

அபிவாதயே........போ:.

கொஞ்சம் பஸ்மாவை எடுத்து இடது உள்ளங்கையில் வைத்துக்கொண்டு வலது கை நடுவிரலால் சாந்துபோல் குழைத்துக் கொண்டு இதைச் சொல்லவேண்டியது :

த்ரியாயுஷம் ஜமத³க்³நே: கஶ்யபஸ்ய த்ரியாயுஷம்
அக³ஸ்த்யஸ்ய த்ரியாயுஷம் யத்தே³வாளும் த்ரியாயுஷம்
தந்மே அஸ்து த்ரியாயுஷம் ॥
அதே விரலால் ரக்ஷையை இட்டுக்கொள்ளவேண்டியது.

---

**தந்தை ஒரு குருபோல் இருக்க வேண்டும்,**

ப்$^3$ரஹ்மபி$^3$ந்து$^3$ரஸி — நெற்றியில்
அம்ருத பி$^3$ந்துரஸி — நாபியில்
ஆயுர்பி$^3$ந்து$^3$ரஸி — மார்பில்
ஆரோக்$^3$யபி$^3$ந்து$^3$ரஸி — கழுத்தில்
ஸ்ரீ பிந்துரஸி — வலது தோளில்
த$^4$நாபிந்துரஸி — இடதுதோளில்
ஸர்வான் காமான் பிந்துரஸி – பின்பக்கத்தில் (முதுகில்)
ஸௌப$^4$ாக்$^3$ய பிந்துரஸி — கழுத்தின் பின்புறத்தில்
ஸ்வஸ்தி — நடுத்தலையிலும்

ரக்ஷைகளை இட்டுக்கொள்ளவும்.

ஸ்வஸ்தி ஶ்ருத்த$^4$ாம்யஶ: ப்ரஜ்ஞாம் வித்$^3$யாம் புத்$^3$தி$^4$ம் ஶ்ரியம்ப$^3$லம் ।
ஆயுஷ்யம் தேஜ ஆரோக்$^3$யம் தேஹிமே ஹவ்ய வாஹந ।
ஆசமநீயம் செய்யவேண்டியது.

**ஸமிதாதானம் முற்றிற்று.**

---

## வரப்பெற்றோம்.

***விகாரிஹூ வாக்கிய பஞ்சாங்கம்:*** ஸ்ரீ R. S. ரகுநாத அய்யரால் கணிக்கப்பட்டது. ஜோதிட பரிபாலன மடம், கொக்குவில், யாழ்ப்பாணம் என்றவிடத்தில் ரூ. 1-25ந.ப. விலைக்குக் கிடைக்கும். தபாலில் பெற விரும்புவோர் இந்தியன் ஸ்டாம்புகளாக பஞ்சாங்கம் ஒன்றுக்கு 1 ரூபா 65 ந. பை. அனுப்பி ரிஜிஸ்டர்டு புக்போஸ்டில் பெற்றுக்கொள்ளலாம். ஸகல விஷயங்களும் அமைந்தது.

***பாரத் கணித பஞ்சாங்கம்:*** பண்டிட் E. S. K. ஸ்வாமி, ஸ்ரீ எல். வி. எஸ். மணி அவர்களாலும் கணிக்கப்பட்டது. ஸ்ரீ ஆசார்யாள் அனுஷ்டிப்பது. விலை 50 ந. பைசா. 17, தேவடித்தெரு மைலாப்பூர், சென்னை-4ல் கிடைக்கும்.

***விலை மாருதல் :*** மாம்பலம் குருகுல வெளியீட்டின் ஸ்ரீ விநாயக ஸகஸ்ரநாமம் விலை 75 ந. பையிலிருந்து ரூ. 1—0—0 ஆக மாறியிருக்கிறது.

---

**நாம் நமது ஜாதிக்குள் பேதம் வேண்டாமெனில்**

ருதுவானபெண்

# கன்யகாதான ப்ராயச்சித்தம்.

விவாஹம் கன்யைக்கு உபநயனம் போலாம். வரனுக்கு தர்மப்ரஜோத்பத்திக்கும் தர்மகர்மானுஷ்டானத்திற்கு மட்டுமே விவாஹமாம். பெண்ணின் பெற்ருேருக்கு முறைப்படி கன்யகாதானம் செய்தால் இருபத்தோரு தலைமுறை பிரும்மலோகத்தை அளிப்பதாம். கன்னியாதானத்திற்கு முன் கன்னியை ருதுவானுல் பித்ருக்கள் அதைப் பக்ஷிப்பாராம். கன்னியாதானபலமும் கிட்டாது. ஆபத்திலுலோ, சட்ட நிர்பந்தத்திலுலோ ருதுமதீ விவாஹம் நேர்ந்தால் கீழ்க்கண்டப் பிராயஸ்சித்தத்தைச்செய்து கன்னியாதானம் செய்தால் சிறிதாவது பலனைப் பெறலாம். விவாஹத்திற்கு முன் எத்தனைமுறை ருதுவாகின்ருளோ அவ்வளவு கோதானம் பிதா செய்யவேண்டும். ஒரு ரத்னம் அல்லது ஸ்வர்ண கங்கணத்தை ருதுவாகாத பெண்ணிற்கு பெண் தானம் செய்யவேண்டும். வரன் கூஶ்மாண்ட ஹோமம் செய்ய வேண்டுமென மஹர்ஷிகள் சொல்லியிருக்கிருர்கள். அவ்வளவு கோதானம் செய்ய சக்தி இல்லாவிடினும் அதற்கு ப்ரதிநிதியாக (பதிலாக) கொஞ்சம் த்ரவ்யமாவது தானம் செய்ய வேண்டும். சிரத்தை யுள்ளவர்கள் அனுஷ்டித்துப் பலனைப் பெற இதை வெளியிடுகிருேம்.

கன்யகாயா: கன்யகாதானப்ராக்கால ரஜோதர்ஶந ஸம்பவேன கன்யகாதானபலஸ்ய அபூர்ணத்வேன வைகல்யஸம்பவாத், தத்பலஸ்யஸாகல்யேனபூர்ணதா ஸித்யர்த்தம் தன்மாதாபித்ரோஶ்ச ஸம்பாவிததோஷ பரிஹாரார்த்தம் மார்கண்டேய யாக்ஞவல்க்யாதி மஹர்ஷிபி: தத்தோஷ பரிஹாராய நிர்ணீதம் ப்ரத்யருது ஏக கோதானம் அத்ருஷ்டரஜஸே கன்யகாயை கனக கங்கண தானரூபம் பரிஹாரம் ருதுகணநாமனுஸ்ருத்யகர்தும் அஶக்யத்வேன தத்ப்ரதிநிதி யதாஶக்தி ஹிரண்யம் நானுகோத்ரேப்ய: ஸம்ப்ரததே ॥ கூஶ்மாண்டஹோமஞ்ச கரிஷ்யேஎன்று திரவியமளித்து தானம் செய்யவேண்டும்.

---

*பின்னவர் மநுஷ்ய ஜாதியிலே பேதமேன் என்பர்.*

# ஹாலாஸ்ய மஹிமை.

## வாளாசிரியனாய் வந்த வரலாறு.

குலோத்துங்கபாண்டியன் ஆளும்போது அன்யநாட்டிலிருந்து வந்த ஒரு இளைஞன், அவ்வூர் வாள்வித்தை கற்பிப்பவரிடம் சிஷ்யனானான். ஸித்தன் என்ற அவன் அக்கல்வியில் கரை கண்டான். கர்வமும் கொண்டான். குருவை மதிப்பதில்லை. தான் தனியே ஒரு வாள் வித்யாசாலை அமைத்து தன்குருவை இகழ்ந்து பேசி ஆங்குள்ளவர்களையும் தனது சாலைக்கு இழுத்தான். அத்துடன் நிற்காமல் ஸௌந்தரேச பக்தரான அந்த குருவின் மனைவியான மாணிக்கமாலையை கவரக் கருதினான். குரு இல்லாத போது அவளிடம் காமப் பேச்சுகளைப் பேசினான். அவ்வுத்தமி மீனாக்ஷியைத் துதித்து இவன் அருகே வராதபடி கதவைத் தாளிட்டாள். பகவானைத் துதித்துப் பாபியை சிக்ஷித்து தன்னை ரக்ஷிக்க வேண்டினாள்.

கருணாமூர்த்தியான கடவுள் வாள் ஆசிரியர் உருவமேந்தி அந்த ஸித்தனை வாள்வித்யையில் போருக்கழைத்தார். பெருங் கூட்டத்தினிடையே இருவருக்கும் வெகு நேரம் போர் விசித்ரமாக நடந்தது. பகவான், சித்தா! குருபத்நியைக்காமனையுடன் கண்டகண்களைக்காத்துக்கொள். அவளிடம் ஆசைகொண்ட ஹ்ருதயம், ரஹஸ்யமாக அவள் வீடுசென்ற கால், பேசிய நாவு இவைகளையும் காப்பாற்றிகொள் என கத்தியால் ஒவ்வொரு அவயவங்களையும் வெட்டி எறிந்தார். உடனே அவரும் மறைந்தார். அவர் சீடரும் நகர வாஸிகளும் அவள் வீடு சென்று அவரை வாழ்த்திப் போற்ற அழைத்தார்கள். அவர் மனைவி பதி கோவிலுக்குப் போயிருப்பதாகக்கூற என்ன ஆஶ்சர்யம்! ஸித்தனைக் கொன்றவர் வாள்குரு அல்லவோ? என எல்லோரும் பிரமித்தனர். குருவும் தன்னுடல் தாங்கி தன் மனைவியையும் தன்னையும் காத்தவர் ஸோமசுந்தரனே என அவன் திருவடியில் விழுந்து துதித்தார். இதைக் கேட்ட பாண்டியன் ஸோமசுந்தரர் அருள்பெற்ற தம்பதியை யானை மீதேற்றி ஸன்மானம் செய்து ஊர்வலமாக அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அங்க விஶ்வஸநாய நம:

---

**பிறகு வர்ண ஸங்கா மேற்படுவது ஸஹஜம்.**

# சித்திரை மாத கோசார பலன்.

ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,
பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

[பாரத் கிரஹ ஸஞ்சாரம்: மாதாந்திர தமிழ் ஜோதிஷப்பத்திரிகை.
48 பக்கம், வருடசந்தா ரூ. 6. 17, தேவடித்தெரு, மைலே.

## மேஷ ராசி

*அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய*

குரு அஷ்டமத்தில் வக்ரமாயிருக்கிறார். சனி பத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலும், இருக்கிறார்கள். சூரியன் மேஷத்திலிருக்கிறார். இதனால் புதிய முயற்சிகள் கூடிவரும். சுபகாரியங்களில் சிலவுகள் உண்டாகும். சில பொருள் விற்பனை மூலம் அனுகூலம் ஏற்படும். குடும்ப சௌகர்யமும், வியா பாரம் உத்தியோகம் இவைகளில் புதிய ஏற்பாடுகளும் உண்டாகும். இம்மாதம் பூராவும் தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்ரம் பாராயணம் செய்து குருவாரத்தில் ஒருவருக்கு அன்னம்போட நன்மை.

## ரிஷப ராசி

*கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய*

குரு ஸப்தமத்தில் வக்ரமாயிருக்கிறார். சனி அஷ்டமத்தில் இருக்கிறார். ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலும் இருக்கிறார்கள். இதனால் புண்ணிய காரியங்களிலும், சுபகாரியங்களிலும் செலவுகள் உண்டாகும். குடும்பத்தில் ஆரோக்யஸம்மந்தமான கவலைகள் ஏற்பட்டு வரும். புதிய திட்டங்கள் தடைப் பட்டு கூடிவரும். மேலோர் நேசமும், உத்தியோகத்தில் நன்மையும், வியா பாரத்தில் பீதியும் ஏற்பட்டு வரும். சிலருக்கு பந்து பகையும், தன் சொல்லே தனக்கு விரோதமாவதும் உண்டாகும். பிரதி சனிக்கிழமையும் மிருத்யு ஜபம் செய்ய நன்மை. பீடை விலகும்.

## மிதுன ராசி

*மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம் பாதம் முடிய*

குரு ஆறிலும், சனி ஏழிலும், ராகு நான்கிலும், கேது பத்திலும், சூரியன் லாபத்திலும் இருக்கிறார்கள். இதனால் சுபமுயற்சிகள் தடைப்பட்டுக் கூடும். உத்தியோகத்தில் சில அபிப்ராய பேதங்கள் ஏற்பட்டு நீங்கும். புதிய சிந்தனை கள் உண்டாகும். வியாபார நடப்பில் சில சிக்கல் ஏற்படும். சில்லரைக் கடனால் நச்சரிப்பு ஏற்படும். குடும்பத்தில் கவலை ஏற்பட்டு விலகும். முயற்சிகள் தடைப்பட்டு வரும். இதற்கு சுப்ரமண்யருக்கு அபிஷேக ஆராதனை செய்ய ஆரோக்யவகையில் நன்மை ஏற்படும்.

---

*அதனால் நரக முண்டாகும்.*

## கடக ராசி

### புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு பஞ்சமத்தில் வக்ரமாயிருக்கிறார். சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலும், சூரியன் பத்திலும் இருக்கிறார்கள். இதனால் சில பொருள் ஆதாயத்துடன் விற்கும்படியாகும். ஸாமான்யமாய் சிறிது தேகசுகம் பாதித்துக் குணமாகும். உத்தியோகத்தில் நன்மையும், ஆதரவுமுண்டாகும். குடும்ப நடப்பில் சௌகர்யமுண்டாகும். புதியவகையில் சிலருக்கு வருமானம் கூடும். சுபவிரயம் ஏற்படும். வியாபாரத்தில் முன்னேற்றம் உண்டாகும். கம்பளி, இரும்பு இவைகளை தானம் செய்வதால் பீடைகள் விலகும்.

## சிம்ம ராசி

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கில் வக்ரமாயும், சனி பஞ்சமத்திலும், ராகு இரண்டிலும், கேது எட்டிலும், சூரியன் பாக்கியத்திலும் இருக்கிறார்கள். இதனால் செய்தொழிலில் சில புதிய நன்மைகளும், வருமானமும் உண்டாகும். சுபகாரியங்கள் கூடிவரும். உத்தியோகத்தில் நன்மையும், அதிகாரி ஆதரவும் ஏற்படும். வியாபாரத்தில் விருத்தியும் ஆனால் ஸமவருமானமும் ஏற்பட்டுவரும். குடும்ப சௌக்கியமும் உண்டாகும். துர்க்காதேவிக்கு அபிஷேகம் செய்வதால் மனம் நிம்மதியாகும்.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு மூன்றில் வக்ரமாயும், சனி நான்கிலும், ராகு ராசியிலும், கேது ஏழிலும் இருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிறார். இதனால் வெளியூர் போய்வர நேரும். முயற்சிகளில் சோர்வு ஏற்படும். தேகசுகம் சிறிது பாதிக்கும். செலவுகள் அதிகரிக்கும். வியாபாரத்தில் கவலை ஏற்பட்டுவரும். உத்தியோகத்தில் திருப்தியான போக்கு இராது. குடும்ப செலவு அதிகரிக்கும். முடிவில் சில புதிய நன்மைகள் உண்டாகும். விஷ்ணு ஸகஸ்ரநாம ஜபமும், ஆதித்ய ஹிருதய பாராயணமும் செய்வது நன்மை.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு இரண்டில் வக்ரமாயும், சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலுமிருக்கிறார்கள். சூரியன் ஏழில்இருக்கிறார். இதனால் புதிய முயற்சிகள் கை கூடிவரும். பிறர் ஆதரவு ஏற்படும். உத்தியோகத்தில் நன்மையான சில மாற்றம் உண்டாகும். ஸ்திரீ மூலமான கவலை ஏற்படும். வியாபார நடப்பில் புதிய முன்னேற்றம் உண்டாகும். குடும்ப சௌக்யமேற்படும். சிலருக்கு சில பொருள் விற்பதன் மூலம் ஆதாயம் ஏற்படும். பிரதி வெள்ளிக்கிழமையிலும் லலிதாஷ்டோத்ரம் செய்வது நலம்.

## விருச்சிக ராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ஜன்மத்தில் வக்ரமாயும், சனி இரண்டிலும், ராகு லாபத்திலும், கேது ஐந்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஆறிலிருக்கிறார். இதனால் அலைச்சலைக்

---

கொடுக்கும். வெளியூர் போய்வர நேரும். பந்துக்களால் கிலேசமுண்டாகும். செய்தொழிலில் திருப்தியான போக்கு இராது. குடும்ப கவலை ஏற்படும். உத்தியோகத்தில் சச்சரவும், விவாதமும் உண்டாகும். தன நடப்பில் சுகக் குறைவும் சில்லரைக்கடன் நச்சரிப்புமுண்டாகும். ருத்ர ஜெபம் செய்வதோடு ருத்ராபிஷேகம் செய்ய வேதனை விலகும்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்தில் வக்ரமாயும், சனி ஜன்மத்திலும், ராகு ஜீவனத்திலும், கேது சுகத்திலுமிருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிறார். இதனால் சுப காரியம் தடையாகும். ஆரோக்ய சுகம் குறையும். சிலர் பகையேற்படும். செய்தொழிலில் தர்ம சங்கட முண்டாகும். அதிகாரியால் கவலையேற்படும். குடும்ப செலவுகள் அதிகமாகும். சில அபவாதமும், அபாயமுமேற்படும். மிருத்யுஞ்ஜய ஜபமும், சனிக்கு ப்ரீதியும் செய்வது உத்தமம்.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்தில் வக்ரம். சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலுமிருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால் பழைய சில காரியங்களால் வருத்தமேற்படும். பந்து சினேகிதரால் தூஷணையும் விரோதமுமுண்டாகும். குடும்ப சுகம் குறையும். செய் தொழிலில் சில நன்மை ஏற்பட்டிடும். குடும்பத்தில் சுகக்குறைவேற்படும். தன் சொல்லே சிலருக்கு விரோதமாகும். எதிலும் தடைகளேற்பட்டிடும். பிரதி ஞாயிறிலும் பாம்புப் புத்துக்கு பசும்பால் ஆழாக்கு விட்டுவர நன்மை.

## கும்ப ராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு ஜீவனத்தில் வக்ரமாயிருக்கிறார். சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும், கேது இரண்டிலுமிருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனால் செய் தொழிலில் நன்மையுண்டாகும். வெளியூர் போய்வர நேரும். பெரிய மனுஷ்யர்கள் நேசமேற்படும். புண்ணிய காரியங்களில் செலவுகள் உண்டாகும். உத்தியோக நன்மையேற்படும். அதிகாரி ஆதரவு உண்டாகும். மகாவிஷ்ணுவுக்கு அபிஷேக ஆராதனை செய்ய நன்மை.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு பாக்கியத்தில் வக்ரமாயிருக்கிறார். சனி ஜீவனத்திலும், ராகு ஏழிலும், கேது ராசியிலுமிருக்கிறார்கள். சூரியன் இரண்டிலிருக்கிறார். இதனால் செய் தொழில் புதியவகையில் விர்த்தியாகும். உத்தியோகத்தில் நன்மையேற்படும். குடும்பத்தில் சில கவலைகளுண்டாகும். பெரிய மனுஷ்யர்கள் நேசமேற்படும். சுபமுயற்சிகள் உண்டாகும். சில பொருள் விற்பனையால் ஆதாயமுமேற்படும். லக்ஷ்மி அஷ்டோத்திரம் அர்ச்சனை செய்து ஜபம் செய்ய குடும்ப சுகமேற்படும்.

---

**கொஞ்சம் சருக்கினால் பதிதனாவோம்.**

## விநாயக புராணம்.

சக்தியினிடம் தோன்றிய இச்சிறுவனாலே தனக்கு அபஜயமுண்டாகும் என துராஸதன் ரணகளத்தை விட்டோடினான். ஓடுகின்றவனைக் கொல்வது ந்யாயமில்லை என விஸ்வரூபமெடுத்து அவனைக் கீழே தள்ளி ஒருகாலை அவன் மீதுவைத்து சிவ வரத்தினால் உனக்கு மரணமில்லை. நகரத்தின் வாயற்படியில் என்காலடியிலிருந்து துஷ்டர்களைக் கொன்று கொண்டு இங்கேயே இரு என்றார். அங்ஙனமே அவன் பக்தியுடன் பணிந்து பகவானைப்போற்றினான். தேவர்கள் பூமாரிப் பொழிந்து கணேசனைப்போற்றி அவரவர் ஸ்தானங்களை அடைந்தார்கள்.

அந்த அந்த ஆச்ரமங்களில் உள்ளோரைத் தேடி அவரவர் கர்மாவைச் செய்யும்படி தூண்டியதால் "டுண்டி" என்ற பெயர் அவருக்குத் தோன்றிற்று. (டுண்டி என்ற சொல்லுக்குத் தேடுவது என்று பொருள்.) இப்பெயருடன் விஸ்வேஸ்வரன் ஆலயத்வாரத்தில் அமர்ந்து இருக்கின்றார். அவர் பஞ்சமுகவிநாயகராவர். மற்ற மூர்த்திகளும் அக்காசியில் இன்றும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்றன. துண்டநகரத்தின் திவோதஸன் மீது ஒரு கால் வைத்து நிற்கின்றார் டுண்டி கணபதி.

## திவோதாஸன் சரிதம்.

சூரிய வம்சத்தில் பிறந்த திவோதாசன் என்னும் அரசன் மிக்க தர்மிஷ்டனாகவும் புத்தியில் பிரஹஸ்பதிக்கு ஸமமாகவும் இருந்தான். அவனது தவத்தால் ஸந்தோஷமடைந்த நான்முகன் உத்தமமான ராஜ்யம் வேண்டும் என அவன் கேட்டபொழுது தேவர்களில்லாததால் மழை பொழியாதிருந்த காசிராஜ்யத்தை அவனுக்களித்தார்.

அவன் மிக்க தபஸ்வியானதால் தானே பஞ்ச பூதங்களாகி புண்யத்தால் காலத்தில் மழையை உண்டுபண்ணினான். சுசிலா என்ற தர்ம பத்னியுடன் அவன் இராஜ்யம் ஆளும் பொழுது எங்கும் வேதமோதல், வேள்விசெய்தல் தானதர்மம் ஜபம் பூஜை முதலியவை நன்குநடைபெற்றன. அங்கே யாதொரு வகையான துன்பமும் கிடையாது. அவனை நரரும் ஸுரரும் போற்றினார்கள்.

## சிவன் மந்திரமலைக்குச் சென்ற காரணம்.

ஒருஸமயம் உலகில் மழையில்லாது போகவே யக்ஞ யாகங்கள் நடக்கவில்லை. யாகமே உணவான வானவர்கள் ப்ரஹ்மாவிடம் சென்று முறையிட அவர், மரீசி என்பவர் மந்த்ரமலையில் பத்தாயிரமாண்டுகளாக கடுந்தவம் புரி கிறார். அதனால் உண்டானதாபத்தினால்தான் மழையில்லை. அதனால் யக்ஞமில்லை. உங்களுக்கு உணவில்லை. ஆதலால் சிவனிடம் சென்று மரீசிக்கு வரமளிக்கும்படி ப்ரார்த்திப் போம் என்றார். அங்ஙனமே வேண்ட சிவன் தேவகணங் கள் சூழ மந்த்ரமலைச்சென்று மரீசிக்கு சிவஸாரூப்யத்தை அளித்து கைலாஸத்திற்கு அனுப்பினார். பூமியில் தனது ராஜதானியான காசீநகரம் திவோதாஸனது ஆளுகையில் இருப்பதைக்கண்டு அவன் அதை விடும்வரை தான் மந்த்ர மலையிலேயே தங்குவதாகச் சென்றார்.

அவ்வரசன் அதர்மம் செய்தாலன்றி அவனை அந்த ராஜ்யத்திலிருந்து அகற்ற முடியாது. அவன் ஆளுகை அகன்றாலன்றி ஹரன் அங்கு தங்கமுடியாது. ஆதலால் மந்த்ரமலையிலேயே மாதேவன் தங்கினார். அவ்வரசன் காசியை விட்டு அகல ஏதேனும் வழியுண்டா வென்று காண தேவர்களைப் பரமசிவன் அனுப்பினார். ஆங்கு சென்ற அனைவரும் அங்குள்ள தர்மத்தையும் பக்தியையும் கண்டு தம் தம் பெயரால் ஒவ்வொரு லிங்கத்தையும் ப்ர திஷ்டை செய்து ஆராதித்து வந்தார்கள். ஒருவரும் திரும்பவில்லை. அவ்வரசன் ஆளுகையில் நான்கு வர்ணத் தவர்களும் பெண்களும் ஸ்வதர்மத்தை விடாமல் ஸந்தோ ஷமாக வாழ்ந்தனர். நாட்டில் நோயும், அகால மரணமும், துர்பிக்ஷமும் தோன்றவில்லை. அரசனாணையால் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு நாளும் விஸ்வேசர், மாதவர், டுண்டி, தண்டபாணி, பைரவர், காசி, குகை, கங்கை, மணிகர்ணி கை, பவானி இவைகளை ஸேவிக்காமலிருக்க மாட்டார்கள்.

அங்ஙனம் ஸேவிக்காதவர்கள் தண்டிக்கப்படுவர் என தண்டோரா மூலம் தெரிவிக்கப்படும். அத்தகைய அரச னிடம் யாதொரு தோஷமும் காணப்படாததால் அரசன் ஆளுகையை விடும்படி எங்ஙனம் செய்வது, என சிவ னால் அனுப்பப்பட்ட தேவரனைவரும் தாங்களும் அந்த விதியைத்தழுவி ஆனந்தமாகவாழ்ந்து இருந்தனர். சிவனே

காசிநகரத்தை விட்டுப்பிரிந்ததை நினைத்து வருந்திக்கொண்டிருந்தார். 64 யோகினிகளையும் துர்க்கையையும் திக்பாலகர்களையும் முறையே யனுப்பினர்.

அவர்களும் அங்ஙனமே காசியை விட்டு வராததைக் கண்டு சிலமஹரிஷிகளை யனுப்பினர். அரசன் அவர்களை தக்கபடி வரவேற்று பூஜித்து வஸ்த்ரம் ஆபரணம் முதலியன அளித்தான். அவர்களும் முன்னவர்போலவே காசியில் அமர்ந்து தம் தம் பெயரால் ஒரு லிங்கப்பிரதிஷ்டை செய்து பூஜித்துவந்தனர். பிறகு பரமசிவன் சிந்தை கொண்டு டுண்டி கணபதியையும் மாதவனையும் தவிர வேறு எவராலும் அது முடியாது என்று தீர்மானித்து அவர்களை நினைத்தார்.

அவர்கள் எதிரில் தோன்றியவுடன் தனது கருத்தை வெளியிட்டு காசிக்குத் தான் வரும்படி செய்க என்றார். அங்ஙனமே செய்வதாகக் கூறி சென்றனர். விநாயகர் ஓர் ஜோஸ்ய பிராம்மண வடிவமெடுத்து நகரில் ஸஞ்சரித்தார். அவரது அழகைக்கண்டு பதிவ்ரதைகளும் அவரிடம் ஆசைகொண்டனர். அவரவர் மநதினுல் நினைத்ததைக் கூறி அது பலிக்கும் வகையையும் கூறுவார். ஆதலால் குழந்தைகளையும் பதியையும் விட்டு கற்பரசிகளும் ஸதா இவரையே சூத்துவார்கள். சிலருக்கு சிவஸ்வப்னத்தை தோற்றிவைத்து மறுநாள் நீ இந்த கனவு கண்டாய். அல்லவா? என்று கேழ்க்க அனைவரும் ஆச்சர்யமடைந்தனர். அவரருளால் தீராத குஷ்டநோய்களகன்றன. மலடிகளும் புத்ரவதியானர்கள். ஏழை தனிகனுனன். காணுத பொருள் கண்ணில்பட்டது. பிறக்கப்போகும் சேய் ஆணு? பெண்ணு? என்று கூறுவார். ஆதலால் இவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் தேனை வண்டு மெய்ப்பதுபோல் அவரைச் சூழ்ந்தனர். நகரமெல்லாம் அவர் பேச்சே. ஒவ்வொரு இடமாகப் பரவி அரண்மனையிலும் இவர் வரவேற்கப்பட்டார். அரசன் இவரை வணங்கி மதுபர்க்கம் அளித்து பல ஆஸ்சர்யங்களைக் கண்டு கேட்டுக்களித்தார். பலரஹஸ்யமான விஷயங்களை அவர் கூற ஆநந்தமடைந்து அவருக்கு வேண்டிய வீடு, பூமி, தனம், தான்யம் முதலியவைகளைத் தருவதாகக்கூறினுன். எண்ணிறந்த யோகபாக்யங்களைத் துறந்து காசியில் வசிக்கவந்த எனக்கு இவை

களால் ஆவது ஒன்றுமில்லை. உனது நன்மையை நாடி நான் சொல்லும் சொற்படி நீ நடந்தால் அதே எனக்கு நீ செய்யும் பேருபகாரமாம். பதினேழாவது நாளில் ஓர் மஹாபுருஷன் வந்து உனக்கு உபதேசிப்பார். அதன்படி நீ நடத்துவாயாக என்றார்.

அங்ஙனமே செய்கிறேன் என அரசனும் மற்றோரும் வாக்களித்தார்கள். மஹாவிஷ்ணு பதினேழாவது நாள் அரசனிடம் புத்தனாக வந்து ஶ்ருதி ஸ்ம்ருதிகளுக்கு விரோதமாக பௌத்த தர்மத்தை உபதேசித்தார். மூர்த்திகளை பூஜைசெய்பவர் அவரவர் ஹ்ருதயத்திலுள்ள ஸ்வாமிக்கு த்ரோஹம் செய்பவராவர். பசு, பக்ஷி, ம்ருகங்கள், செடி, கொடிகள், முதலிய ஒன்றையும் ஹிம்ஸிக்கக்கூடாது. அதே சிறந்த தர்மம் எனக் கூறி ஸ்வதர்மத்தை விடும்படிச் செய்தார். அவரது பத்னியான லக்ஷ்மியும் கமலா என்ற பெயருடன் தோன்றி ஸ்த்ரீகளுடைய மனதை மயக்கி தன்பதியினிடம் உள்ளதுபோல் ஸகல புருஷர்களிடமும் ஒரே ஆத்மா விருப்பதால் வ்யபிசாரம் எனும்குற்றமில்லை என தீயவழியில் திருப்பினாள். காசியில் அரசன் உள்பட அனைவரும் ஸ்வதர்மத்தை விட்டு எல்லோரும் பாபிகளாக ஆனார்கள்.

மறுபடியும் அவர் அரசனிடஞ்சென்று இந்த வாராணஸி சூலபாணியால் படைக்கப்பட்டு ப்ரளயத்திலும் சூலத்தின் நுனியில் நிறுத்தி காக்கப்படுகிறது. மோக்ஷத்தை விரும்பி அங்குஇறப்பவர்களுக்கு சிவன் தாரகமந்திரத்தை கூறுகிறார். அந்த தர்மத்தை கைகொண்டவர்களே அங்கு வஸிக்கலாம். அன்ய தர்மத்தைக் கைகொண்டவர்களைச் சிவன் ஆணையின்படி பைரவர் கடுமையாக சிக்ஷிப்பார். ஆதலால் நீ இங்கு தங்கவேண்டாம். வேறு இடம் செல் என உபதேசித்தார். அரசன் அதை ஹிதமெனக்கருதி காசிநகரத்தை விட்டு கிளம்பக்கருதி தாங்கள் யார்? அந்த ஜோதிஷர் யார்? என்று கேழ்க்க இருவரும் தம்தம் ரூபத்தை அரசனுக்குக் காட்டினர்.

அரசன் தனது ராஜ்ய சின்னங்களை அவர்களிடம் ஒப்படைத்து தன்அரண்மனையில் தன்பெயரால் ஒரு சிவலிங்கத்தைப்ரதிஷ்டை செய்து சிவதர்சனத்திற்காக காத்துக்

கொண்டிருந்தான். விஷ்ணுவும் விநாயகரும் மந்திரமலைக் குச்சென்று இனி வாராணஸி தங்களைச் சார்ந்தது. தாங்கள் விஜயம் செய்து முன்போலவே காசியில் தங்கலாம் என்று ப்ரார்த்தித்தனர். இதைக் கேட்டு ஸந்தோஷமடைந்த விஸ்வேஸ்வரர் விருஷபாரூடனுகக் காசிக்கு வந்தார். அவர் வரும்வரை உண்பதில்லை என வ்ருதங்கொண்ட ஜைகீஷ கவ்யருக்குத் தர்ஸனம்தந்து விநாயகரைவணங்கிப்போற்றி காசியில் இறப்போருக்கு தாரக மந்திரம் உபதேசித்து வந்தார். ஆங்குள்ள டுண்டிகணபதியை ஸ்மரித்தவர் விக்னமகலும். கண்டகி நதியிலிருந்து சிலையைக் கொண்டு வந்து விநாயகர் விக்ரஹம் ப்ரதிஷ்டை செய்தார். திவோதாஸனுக்கு முக்தியளித்தார்.

இதை க்ருத்ஸமதரிடம்கேட்ட கீர்த்தி க்ஷிப்ரப்ரஸாதன் எனும் புதல்வனுடன் காசிக்குச் சென்று டுண்டிகணபதியை வணங்கி மாகமாதம் செவ்வாய்க்கிழமையுடன் கூடிய சதுர்த்தியில் விஸேஷ உற்சவம் செய்வித்தாள். தூர்வை ஸமீ முதலிய பத்ரங்களால் அவரைப் பூஜித்து உபவாஸமிருந்தாள். பகவான் ஸந்தோஷமடைந்து தன்னிடம் உள்ள பரசு எனும் ஆயுதத்தை அவனுக்கு அளித்து பரசு ஹஸ்தன் எனப்பெயரிட்டு ஆசீர்வதித்தார். கீர்த்திசெய்த ஸ்தோத்திரத்தை ஆமோதித்து அதைப் பாராயணம் செய்வோர் நன்மை பெறுவார் என்றார்.

கீர்த்தி ஸந்தோஷமடைந்து தனது நகரத்திற்கு வந்து பதியினிடம் நடந்த வ்ருத்தாந்தங்களைக் கூறினள். தந்தை புத்ரனுக்கு பட்டம்சூட்டி மனைவியுடன் கானகம்சென்றான். க்ஷிப்ரப்ரஸாதனும் பல்லாண்டு ராஜ்யபாரம் செய்து முடிவில் டுண்டிகணபதியின் ஸாரூப்யத்தைப் பெற்று விநாயகலோகத்திற்குச் சென்றான்.

## விநாயக லோக வர்ணனை.

முத்கலர் காசியாத்ரைக்குச் சென்றபொழுது அவரை தக்கபடி பூஜித்து முழுமுதல் தெய்வமான விநாயகரது உலகமெங்கு இருக்கின்றது? அவர் எத்தகையவர்? என்று காசிராஜன் கேழ்க்க அவர் கூறினர்.

விநாயகபக்தர்கள் கருப்பஞ்சாறு கடலின் இடையில் உள்ள ஸ்வானந்தபுவனம் நிஜலோகம் என்ற இருபெயர்

வாய்ந்த இடத்திற்குச் செல்வார்கள். சித்தி புத்திகளுடன் விநாயகர் அங்குவிற்றிருக்கின்றார். நராந்தகன் முதலிய ராக்ஷஸர்களைக் கொல்ல கஸ்யபபுத்ரனுக அவதரிப்பார் என்று முன்கூறியதைக்கொண்டு காசிராஜன் கச்யபபுத்ர ராக அவதரித்த மதோத்கட கணபதியை தனது புத்திரன் விவாஹம் என்ற வ்யாஜமாக காசிக்கு அழைத்து வந்து பல லீலைகளை அனுபவித்தான். விநாயகபக்தியால் சரீரத்துடன் அவரது லோகம் சென்றான். விநாயகர் காசியை விட்டு அகன்றவுடன் பித்தம் பிடித்தவரைப் போல் அவரையே நினைத்து அலைந்து திரியும்பொழுது மறுபடியும் காசிராஜனிடம் வந்து அவரது மஹிமையைக் கூறினர் முத்கலர்.

மன்னு! நம் விநாயகர் உள்ளவிடம் ஸத்யலோகம் வைகுண்டம் கைலாஸம் இவைகளுக்கு மேலான இடம். ஆங்கு ஐய்யாயிரம் யோஜனை தூரம் விஸாலமான காமதாயினீ என்ற பீடத்தில் ரத்ன ஸிம்மாஸனத்தில் அவர் அமர்ந்திருக்கின்றார். வேதம், தானம், யாகம், வ்ரதம் முதலியவைகளால் அங்கு செல்லமுடியாது. அவர் அருளாலும் அசஞ்சலமான பக்தியினாலும் அங்கு சென்று அவரை தர்சிக்கலாம். அங்கு அவர் ஸமஷ்டி வ்யஷ்டி என இருவகையாகவும் காணப்படுகிறார். அவரது கால்கள் பாதாளத்தில் சேஷனது தலையில் இருக்கின்றன. காதுகளால் திக்குகளை வ்யாபித்து இருக்கின்றார். அவரது கேஸம் ஆகாஸமாக இருக்கின்றது. இருபுருவங்களுக்கு இடையே இரண்டு இதழ் உடைய அக்னி சக்ரத்தில் சிலர் அவரை த்யானிக்கின்றார்கள். கேசரீ முத்ரையோடு கூடியவனே அவரை த்யானம் செய்யமுடியும். பிரம்மாண்டத்தில் ஆயிரமிதழுடன் கூடிய தாமரையில் ஜ்யோதிரூபமாக இருகின்றார். பன்னிரண்டு இதழ்களுள்ள ஹ்ருதய புண்டரீகத்தில் சிலரும் பத்திதழ்களுள்ள நாபி சக்ரத்தில் சிலரும் மூலாதாரத்தில் சிலரும் ஷோடசாரமுள்ள கண்டத்தில் சிலரும் அவரை த்யானம் செய்கின்றார்கள்.

சந்த்ர, சூர்யாக்னி ஆகியவர்கள் அவருக்கு கண்கள். பூ மண்டலமே அவரது வடிவாம். எங்குமுள்ள ஓஷதிகளே அவரது ரோமாக்கள். நதியும் கடலும் அவரது வியர்வை ஜலம். முப்பத்து முக்கோடி தேவர்களும் கண்டங்களும்

அவரது உடலில் அமர்ந்த கொசுபோலாகும். இவர் உட லில் உள்ள த்வாதசாரத்தில் வைகுண்டமும் விஷ்ணுவும் கழுத்தில் கைலாஸமும் சிவனும் இருக்கின்றார்கள். கைலா ஸத்தை எட்டும் உயர்ந்த சிகரம் ஆயிரம் யோஜனை தூரத் தில் ஒன்றுளது. அது சூன்யமிடமானதால் மஹரிஷிகளும் அங்கு செல்ல முடியாது. ஆங்கு ப்ராமிகா என்றோர் சக்தியுள்ளது. அதைச்சுத்தி மற்ற பிரமரங்கள் சுற்றிக் கொண்டு சப்தம் செய்கின்றன. அவன் தலைமீது பத்மா ஸனத்தில் ஆதாரசக்தி ஒன்றுளது. அதன் தலைமீது காம தாயனீ என்ற சக்தியுள்ளது. அதன் மீது கோடிசூர்ய பிரகாஶமான ஓர் பீடம் இருக்கின்றது. பத்தாயிரம் யோஜனை தூரமுள்ள அவ்விடத்தில் ஆனந்தபுவனம் என் பது அமைந்துளது. ஆங்கு எண்ணிறந்த யானையின் முத்துகளால் அமைந்த வீடுகள் இருக்கின்றன. அதன் உத்ரபாகத்தில் கருப்பங்கடலும் அதனிடையில் ஓர்தாமரை ஓடையும் அதன் நடுவில் ஆயிரம் இதழுள்ள தாமரையும் அதனிடையில் ஓர் கர்னிகையும் அதில் ஓர் ரத்னகட்டிலும் இருக்கின்றது. அதில் சித்தி புத்திகள் காலைப்பிடிக்க கணேஶன் சயனம் செய்துகொண்டிருக்கின்றார். ஸாம வேதம் சரீரம் எடுத்துக்கொண்டு அவர் அருகே பாடு கின்றது. ஶாஸ்த்ரங்கள் அவரைத் துதிக்கின்றன. புரா ணங்கள் அவரை வர்ணிக்கின்றன. அதில் பாலரூபதாரி யாய் அழகிய துதிக்கையுடன் விஶாலமானமார்பும் அழகிய தந்தங்களும் கிரீட குண்டலங்களும் கஸ்தூரி திலகமும் திவ்யமாலைகளும் திவ்ய வஸ்திரங்களும் திவ்ய கந்தமும் நவரத்ன மாலையும் விளங்க கணேஶர் ப்ரகாசிக்கின்றார். அவரை நினைத்தவுடன் ஸகல பாபங்களும் அகலும். தேஜோவதி, ஜ்வாலினி என்ற இருசக்திகள் கட்டிலருகே இருக்கின்றனர். ஆங்கு குளிரும் தாபமும் கிழத்தனமும் மரணமும் பசிதாகமும் துக்கமும் கிடையாது.

விஶ்வ வ்யாபியான பகவான் பாலரூபியாக இருக்க அவரை தர்ஶித்து ஆனந்தக்கடலில் மூழ்கி ஆங்குள்ளோர் பேரானந்தத்தை யனுபவிக்கின்றனர் எனக்கூறி முத்கலர் சென்ற பின் காசிராஜன் ஐயாயிரமாண்டுகள் ராஜ்ய பரிபாலனம் செய்து மானிட உடலுடன் ஆநந்தபுவனம் சென்றான். எப்படி ஆராதித்து ஆனந்தபுவனம் சென்றான் என்று வேதவ்யாஸர் கேட்க்க ப்ரம்மா கூறினார்.

காசி ராஜன் விநாயகர் ப்ரீதியைநாடி பிரதிதினம் வேதியருக்கு கோதானம் பூதானம் ஸ்வர்ணதானம் முதலியவைகளைச் செய்வான். மாகசுக்ல சதுர்த்தீ செவ்வாய்க்கிழமையோடு கூடியபோது மங்களஸ்நாநம் செய்து முத்கலர் கூறியவாறு தன்னை அழைத்துச் செல்ல கணேச விமானம் வரும் என்று காத்திருந்தான். இன்னும் விமானம் வரவில்லையே என ஏங்குவான். இங்ஙனம் நாள்தோறும் அவன் ப்ரயாணப்படுவதைப் பார்த்து அவன் ஆயுள் முடியும் காலத்தை எதிர்பார்த்து முடிவில் இரு தூதர்களுடன் ஓர் விமானத்தை அனுப்பினார் விநாயகர்.

ஜ்வலித்துக்கொண்டும் அழகிய மணிகளால் சப்தித்துக்கொண்டும் வரும் விமானத்தைக் கண்டு கணேச பக்தனை காசிராஜனுக்காகவே கணேச விமானம் வருகிறதென குடிகள் கூறிக்கொண்டார்கள். அரசன் அரண்மனையருகிலிறங்கி தூதர்கள், காசிராஜனே! நீ சிறந்த பக்திமான்! உத்தம தாதா! சிறந்த தர்மசீலன்! விரைவாக உன்னை அழைத்துவரும்படி விநாயகராக்ஞை என்றார்கள். அரசன், கணேசனையும் அவர்களையும் துதித்து சரீரத்துடன் விமானத்தின் மீது ஏறி மேலே சென்றான்.

ஆங்கு, பயங்கரமான உடலும் மேலே காலும் கீழே முகமும் பின் புறத்தில் முகமும் தலையில் கண்ணும் பெருத்தவயரும் உள்ள பலர் அங்குமிங்கும் ஆடி ஓடினர். ஜன்னல் வழியாக அவனியில் விழும் கதிரவன் கிரணங்களின் வழியாக பரமாணுக்கள் அசைந்து ஓடுவதுபோல் அவர்கள் ஓடுவதைப் பார்த்து, இவர்கள் யார்? இது என்ன லோகம்? என்று அரசன் கேழ்க்க, தூதர்கள் ப்ரேத பூத பிசாச லோகமிது! பரநிந்தை செய்பவன், கோழ் சொல்பவன், ஸம்ஸ்காரம் செய்யப்படாதவன் முதலியவர்களே இங்கு வசிப்பார்களென்றனர். பயங்கர முகத்தோடு கூடிய ஒருசிலர் ஸஞ்சரிக்குமிடம் சென்று இது ராக்ஷஸர்களுடைய லோகமெனக் கூறினர். பிறகு அழகான ரூபமுடையவர்கள் வசிக்கும் கந்தர்வலோகம் ஸகல போகங்களும் நிறைந்த இந்த்ர லோகம் அக்னி லோகம் யமலோகம் முதலியவிடங்களுக்கு விமானம் சென்றது.

யமலோகத்தில் பயங்கரமான நரகயாதனைகளைக் கண்டு மன்னன் சீக்கிரம் செல் என்றான். தீர்த்த தானம் செய்து சுகத்தையனுபவிப்பவர் நிறைந்த வருணலோகத்தையும் அன்னதானம் செய்தவர் வஸிக்கும் குபேரபட்டணத்தையும், உத்யானம் வைத்து விசிறிதானம்செய்தோர் நிறைந்த வாயுலோகத்தையும் சூர்யபக்தியுள்ளோர் நிறைந்த சூர்யலோகத்தையும் கோதானம் செய்தோர் நிறைந்த கோலோகத்தையும் சந்த்ரலோகத்தையும் கண்டுகளித்தார் அரசன். விமானம் மேலே சென்றது. பிறகு சதாசாரமுள்ளோர் சாஸ்த்ரமறிந்தவர் படித்தவர் கேட்டவர் அன்னதானம் செய்தவர் தீர்த்தயாத்ரைச் சென்றவர் தானம் வாங்காதவர் ஆகியவர் வஸிக்கும் ஸத்யலோகம் சென்றார்.

பிரம்மா காசிராஜனை வரவேற்று பூஜித்து அனுப்பினர். வைசாகத்தில் ஸ்நாநம், தானம் செய்தவரும், திலான்னதானம், அளித்தவரும் கீதாபாராயணம் செய்தவர்களும் பிராணிகளுக்கு பேருபகாரம் செய்தவர்களும் நிறைந்த வைகுண்டம் சென்றார்.

விஷ்ணு அளித்த பூஜையை ஏற்று தேஜோமயமான கைலாஸம் சென்றார். சந்த்ர சூர்யர்களில்லாமல் அது ஸ்வபிரகாசமாய் விளங்குகிறது. பஞ்சாக்ஷரீ ஸ்ரீருத்ரம் முதலியனவைகளை ஜபிப்பவர் புண்யவான்கள் நிறைந்த இடம். அது கைலாஸம். அங்கு சென்று பரமசிவனை வணங்கி மேலேச் சென்றார்.

மேலே மேகநாதம்போல் ஒரு சப்தத்தைக் கேட்டார். மலைகள்போன்ற வண்டுகளைக் கண்டார். அனேக சூர்யன் போல் பிரகாசிக்கும் காந்தியுள்ளவளும் அண்டத்தையே விழுங்கும்படியான வாயுள்ளவளுமான ப்ராமரிகாசக்தி என்பதைக் கண்டு காசிராஜன் மூர்ச்சையடைந்தான். தூதர்கள் அவனைத் தேர்த்தி மேலே யழைத்துச்செல்ல ப்ராமரீ சக்தியின்மேல் மிகபயங்கரமான ஆதாரசக்தியைக் கண்டான்.

அதற்குமேலுள்ள மிக ஆச்சர்யம்வாய்ந்த பலவகை ரத்னங்களால் அமைக்கப்பட்ட ஸ்வாநந்தபுவனமெனும் கணேசலோகத்தைக் கண்டு ஆச்சர்யமடைந்தான். நீல ரத்னங்களால் படிகட்டுகள் அமைந்த கிணறு குளங்களைக்

கண்டான். ஸ்வச்சமாயும் ஶீதளமாயும் இனிப்பாகவும் இருக்கும். அந்த நீரைப்பருகியவர் நோய் கிழத்தன்மை மரணம் முதலியவைகளை அடையமாட்டார்கள்.

வாஸனையினாலேயே ஸகல துக்கங்களையும்போக்கடிக்கும் நந்தவனங்களைக் கண்டான். கருப்பஞ்சாறு கடலைக் கடந்து வெண்தாமரையைக் கண்டான். புண்யம் செய்தவர்களுக்கு மாத்ரம் கிடைக்கும் கருப்பஞ்சாரைப் பருகினான். அதில் உள்ள ஓர் அழகிய தாமரையில் திவ்ய தூபங்களால் வாஸனை உள்ளதாகவும் சாமர விசிறி முதலிய உபசாரங்கள் நிறைந்ததுமான கட்டிலைக் கண்டான். அதில் மிக அழகிய உருவத்துடன் திவ்ய ஆடை ஆபரணங்களும் திவ்ய புஷ்பமும் சந்தனமும் அணிந்து படுத்திருக்கும் விநாயகரின் இரு பாதங்களையும் சித்தி புத்திகள் பிடிக்கக்கண்டான்.

தூதர்கள் சமயம் பார்த்து விநாயகர் விழித்துக்கொண்டபொழுது காசிராஜனை அழைத்துச் சென்றார்கள். அடியற்றமரம்போலரசன் விழுந்தெழுந்து அவரைப்பணிந்து போற்றினான். பாலரூபியான விநாயகரைக் கண்டு பேரானந்தம் அடைந்து ஆனந்தக் கண்ணீர் பெருக உடல்மயிர் கூச்சலிட ஸ்தோத்திரம் செய்தான். அரசனைப் பார்த்து அருகில் வீற்றிருக்கும் தன்னால் கொல்லப்பட்டு நற்கதி அடைந்த தேவாந்தகன் நராந்தகர்களைக் காட்டி இவர்களையும் மற்ற அரக்கர்களையும் கொன்று பூபாரத்தைக் குறைக்கவே கஶ்யபருக்கு புத்ரனாகப் பிறந்தேன்.

நீ உனது மகன் திருமணத்திற்காக என்னையழைத்து வந்து உபசரித்தாய். உனது பக்தியைக் கண்டு அகமகிழ்ந்து பற்பல லீலைகளைச் செய்தேன். க்ஷத்ரிய தர்மப்படி ராஜ்ய பரிபாலனம் செய்தாய். உனது விருப்பத்திற்கு இணங்க முத்கலரை அனுப்பினேன். ஆயுள் முடிந்தவுடன் இந்த விமானத்தை அனுப்பினேன். இதோ முத்கலரும் இருக்கின்றார். நீயும் அவர்களும் இங்கு ஆனந்தத்தை அனுபவியுங்கள் என்றார். அரசன் ஆனந்தமடைந்து அங்கும் பகவானை ஸ்தோத்திரம் செய்தான். அதனால் களித்த பகவான் என்ன வரவேண்டுமெனக் கேட்க்க இதற்கு மேல் பெறவேண்டியது ஒன்றுமில்லை ஆயினும் ஜனனமரணமின்றி இங்கேயே தங்களை சேவிக்க அருள்

புரியவேண்டுமென்ருன். அங்ஙனமே நூறு கோடி கல்பம் விளுயகர் அரசனை தன்னருகே வைத்து இருந்தார்.

வ்யாஸர் ப்ரம்மனை நாடி காசிராஜ்யத்தில் ஶுக்லன் என்ற ஏழைக்கு அனுக்ரஹம்செய்தபின் விளுயகர்என்ன லீலைகளைச் செய்தார்? நராந்தகனை எப்படிக் கொன்ருர்? என்றுவிரிவாகக்கூறும்படி ப்ரார்த்திக்க ப்ரஹ்மாகூறினுர். விளுயகர் சுக்ரனது கிருஹத்தில் மாத்திரம் புஜித்து தங்கள் வீட்டிற்கு வரவில்லை என்று நகரஜனங்கள் வருந்தும் பொழுது அனைவர் வீட்டிலும் ஒரே காலத்தில் அமர்ந்து அன்னமுண்டார். அரசன் அரண்மனைக்கு வந்த பொழுது அவரைப்பார்த்து என்னை விட்டுவிட்டு நீங்கள் மாத்ரம் விருந்து உண்டது ஞாயமா? என்ருன். விளுயகர் உன்னோடு கூடவேதான் ஒவ்வொரு வீட்டிலும் புசித்தேன். நீ மறந்தாய்? இது உண்மையா அல்லவா என விருந்து அளித்தவர்களையே விசாரி என்ருர்.

அங்கு எங்கும் செல்லாமல் அரண்மனையிலேயே புசித்த அரசன் ஆச்சர்யப்பட்டு அனைவரையும் அழைத்து விசாரித்தான். எல்லோரும் அவருடன் தாங்களும் அமர்ந்தருந்தியதை மறந்து விட்டீரா? என ஆச்சர்யத்துடன் வினவினர். ஒவ்வொரு வீட்டிலும் ஒரே காலத்தில் தான் இருந்து புசித்ததுடன் நிற்காமல் என்னையும் அருகில் அமர்த்திய விநாயகரின் பெருமைதான் என்ன? என்று கண்மூடி தனக்குள்ளே சிறிது நேரம் அவரை த்யானம் செய்தான். கண்ணைத் திறந்தவுடன் தானே விநாயகர் ரூபமாக இருக்கக்கண்டு முன்னிலும் பன்மடங்கு ஆஶ்சர்யக் கடலில் மூழ்கிஞன். பிறகு அவர் மாயையால் அரசன் தனது ரூபத்தை அடைந்து ஒன்றும்அறியாமல் திகைத்து நின்ருன். பக்தனும் பகவானும் ஒன்றே என எண்பித்தார் அவர்.

அரசன் அவரைப் பல்லக்கில்ஏற்றி தான் பின்தொடர்ந்துவர சுக்லருள்பட அனைவரும் அவரைப்பின்தொடர்ந்து வந்து அரண்மனையில் கொண்டுவிட்டு உத்தரவு பெற்றுச் சென்றனர். சுக்லன் திரும்பியபொழுது தனது குடிசையைக் காணமல் பகவானுக்கு அருசுவை அன்னமளிக்காததால் நம்குடிசையும்போய்விட்டதோ என்று திகைத்து நின்ருன். எண்ணிறந்த வேலைக்காரர்கள் ஓடிவந்து குபேரனது

அரண்மனை போன்ற வீட்டைக்காட்டி இதே தங்கள் வீடு. விநாயகருக்கு பக்தியுடன் நீங்கள் அளித்த விருந்தை ஏற்று இதை யளித்தார் என்றனர். உள்ளே நுழைந்த பொழுது உயர்ந்த பக்ஷ்யங்களும் அறுசுவை அன்னமும் அளிக்கப் பட்டன. அதைக்கண்டு சுக்லனும் மனைவியும் நகரவாசிகளும் கணேசன் கருணையைக் கொண்டாடினார்கள்.

### சூர சபலர் எனும் தூதர்கள்.

நராந்தகனால் அனுப்பப்பட்ட சூரன் சபலன் என்ற இரு தூதர்களும் காசிமா நகரம் சென்று மாறு உருவம் தாங்கி ஆங்கு என்ன நடக்கின்றது என கவனித்து வந்தார்கள். இருவரும் மஹா சூரர்கள். ஒருநாள் மின்னல் வடிவமெடுத்து தம் ப்ரகாசத்தினால் நகர ஜனங்களின் கண்கள் மழுங்கும்படிச் செய்தார்கள். பல்லக்கில் வந்து கொண்டிருக்கும் விநாயகர் அருகே இருவரும் வர அவர்களைப் பார்த்து எல்லோரும் பயந்து அலறினார்கள். பகவான் பல்லக்கிலிருந்தே அவர்களைப் பிடித்து இழுத்து கொல்ல முயற்சிக்கும்பொழுது அவர் காலில் விழுந்து நாங்கள் ஒரு கொசு போன்றவர்கள். மஹா வீரரான தாங்கள், தூதர்களான எங்களுக்கு உயிர் பிச்சையளிக்க வேண்டும் என்று வேண்டினர். அவர்களை விநாயகர் கொல்லாமல்விட எல்லோரும் அவர் கருணையைக் கொண்டாடினார்கள். அவர்கள் ருத்ரபுரம் சென்று நராந்தகனை வணங்கி, அவனால் அனுப்பப்பட்டு விநாயகரிடம் வந்த எல்லா அரக்கர்களும் எப்படிக் கொல்லப்பட்டார்கள்? என்று விரிவாகக்கூறி விநாயகரது பலத்தைக் கொண்டாடி அவரோடு போர் புரிந்தால் நமக்கு ஜயம் உண்டாவது கஷ்டமெனக் கூறினார்கள்.

இதைக்கேட்டு நராந்தகன் கோபங்கொண்டு காசி ராஜனையும் கணேசனையும் கொல்வதாகக் கூறி நால் வகைச் சேனையுடன் காசிமாநகரம் சென்றான். வீர அட்டஹாஸத்துடன் காசியை முற்றுகையிட்டுக் கர்ஜித்தான். அரசன் அன்னம் புஜிக்கும்போது அமாத்யர் ஓடிவந்து முறையிட உடனே எழுந்து ஸேனைகளைத் தயார்செய்யும்படிக் கூறித் தானும் போர்வேஷம் பூண்டு ரணத்திற்குச் சென்றான். விநாயகர் சக்தியின் மகிமையை மெச்சி

அவருள்ளவரை நமக்கு அச்சமில்லை எனத் தைர்யம்கூறி புத்திமான்களான மந்திரிகளுடன் மந்த்ராலோசனை செய்தான். ஒருவன் பிரஹஸ்பதி நீதியிலிருந்து சில நீதிகளைக்கூறி பகைவனுடன் உறவாடி அவனைக் கொல்ல வேண்டுமென்றார். பலர் பலவாறு கூற அரசன் நம்மால் ஆனவரை யுத்தம் செய்து முடிவில் விநாயகரை சரணம் அடைவதுதான் உசிதமென்றான்.

இதற்குள் அஸுர சேனைகள் நகரில் புகுந்து பல அட்டூழியங்களைச் செய்தன. கற்பழிக்கப்பட்ட சில கற்பரசிகள் கோபுரத்தின் மீது ஏறி விழுந்து தற்கொலை செய்துகொண்டார்கள். சில அசுரர்கள் வீதியில் வரும் ஜனங்களைப் பலவகையிலும் ஹிம்ஸித்தனர். நகருக்குத் தீயிட்டனர். காசி ராஜனது ஸேனை ராக்ஷஸ ஸேனைகளுடன் கைகலந்து கடும்போர் செய்தது அஸுர ஸேனை அரசன் வீர்யத்தைப் பொருக்க முடியாமல் பயந்து ஓட இவனது ஜயத்தைக் கண்டு வீரர்கள் ஜயவிஜயீபவ! எனக் கொண்டாடினர். இதைக்கண்ட ராக்ஷஸ ஸேனைத் தலைவன் காசி ராஜனோடு போர் புரிந்து இரு மந்திரி குமாரர்களையும் காசி ராஜனையும் தூக்கி வந்து சிறையிட்டான்.

இதை யறிந்த நராந்தகன் பரம ஸந்தோஷங்கொண்டு இனி சிறுவனான மதோத்கடனை ஜயிப்பது சுலபமென்று வீரர்களை வாழ்த்தினான். காசி ராஜனது மனைவி தன் பதிக்கு நேர்ந்ததைக் கேட்டு மூர்ச்சையாகி விழுந்தாள். தோழிகளால் தேற்றப்பட்டு எழுந்து யாரைச் சரணமடைவேன்? சிறுவனான விநாயகனை நம்பி போரிலிறங்கினார் என் பதி! மஹா வீரனான அசுரனைச் சிறு குழந்தையின் சொல்லைக்கேட்டு எதிர்த்து நின்றாரே! எனப் புலம்பினாள். இதைக் கேட்ட விநாயகர் ஒரு கர்ஜனை செய்தார். ஸித்தி என்பவள் ஓடிவந்து, என்ன வேண்டும்? என, நீ எங்கு சென்றாய்? இங்கு நடந்ததை அறியாயோ? என்றார் விநாயகர்.

அவள் கணேசன் கருத்தை யறிந்து, மிகப் பயங்கரமான உருவத்தோடு கூடியவர்களும் நினைத்தமாத்திரத்தில் உலகை விழுங்கக் கூடியவர்களுமான பல்லாயிரக் கணக்கான வீரர்களைப் படைத்தாள். அவர்கள் தலைவன்

விநாயகரை வணங்கி, ப்ரபோ! எதற்காக என்னை அழைத்தீர்கள்? கோரமான பசிக்கு உணவு அளியுங்கள்! என்றான். விநாயகர், நராந்தகனது ஸேனைகளைப் பிடித்து பக்ஷித்து அவன் தலையைக் கொண்டுவா! என்றார். உடனே அவன் அட்டகாஸம் செய்துகொண்டு, அசுர சேனையில் புகுந்து எல்லோரையும் பக்ஷித்து வந்தான். அவனைப் பார்த்த உடனே பலர் உயிர் துறந்தனர்.

இவனைக்கண்டுநடுங்கிய நராந்தகனும் சிந்தைகலங்கி யோசிக்கும்பொழுது ஸேனையிலுள்ள சிலர் ஓடிவந்து, ஓ தைத்யேந்தர! நம் ஸேனைகளை எல்லாம் ஒரு யமன் பக்ஷித்துவிட்டான்! உங்களையும் பக்ஷிக்க வருகிறான்! ஆதலால் எங்கேனும் ஓடி ஒளிந்து உயிரைக் காத்துக் கொள்ளுங்கள்! என்றார்கள். பயத்தாலும் நராந்தகன் தைர்யமாய் வில்லை வளைத்து அவன் மீது எண்ணிறந்த ஶரங்களை வர்ஷித்தான். அவன் அவைகளை ஒன்றுகூட விடாமல் விழுங்கினான்! தன் பலம் குன்றி ஆயுதமும் குறைந்தபின் நராந்தகன் பயந்து ஓட ஆரம்பித்தான். ஸகல லோகங்களிலும் ஓடி ஒளிய ஆரம்பித்த நராந்தகனைக் கூடவே ஓடிப் பிடித்து இழுத்துவந்து விநயகர் எதிரில் நிறுத்தி, ப்ரபோ! என்னை மிகப் பாடுபடுத்திய அரக்கனை இதோ கொண்டுவந்தேன்! அவனது ஸேனைகளெல்லாம் தங்கள் உத்தரவுப்படி பக்ஷித்தேன்! இதனால் ஶ்ரமமடைந்த எனக்கு நன்றாகப் படுத் துறங்கும்படி ஓரிடம் தரவேண்டுமென வேண்டினான். எனது வயிரே உனக்கேற்ற இடம் என்று அவனை உள்ளே விழுங்கி விட்டார்.

அவனுடன் நராந்தகனும் விநாயகருடைய வயிற்றில் புகுந்தான். சிறையிலுள்ள காசி ராஜனையும் மந்த்ரி புத்திரர்களையும் கூட விநாயகர் விழுங்கி உள்ளே பல அண்டங்களையும் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களையும் காணும்படிச்செய்தார். அலைந்து திரிந்து களைத்த மன்னன் சிறையிலிருந்து நானெப்படி இங்கு வந்தேன்? இது எந்த உலகம்? என்று தவிக்கும்பொழுது, ஒரு பாலன் ஓடி வந்து, அரசே! அஞ்சாதே! யான் வழி காட்டுகிறேன்! என ரோமகூபத்தின் வழியாக அரசனையும் மந்திரி குமாரர்களையும் விரைவில் வரும்படிச் செய்தான். அரசன்

தன் நகரையும் உற்ருர் உறவினரையும் கண்டு ஆச்சர்ய மடைந்து கணேசனைப் போற்றினன்.

அவரே பரமாத்மா என்பதை உணர்ந்தான். நகர ஜனங்கள் உள்ளவிடத்திலிருந்தே பகைவனை வென்று பார்த்திபனை விடுவித்து வந்த பகவானைப் போற்றிப் புகழ்ந்து கொண்டாடினர்கள். அரசனும் ஆனந்தமடைந்து ஆடை யாபரணங்களால் விநாயகரை அலங்கரித்துப் போற்றினன். நகரவாஸிகள் அனைவரும் ஆச்சர்யம் அடைந்து காலபுருஷன்போல் ஒருவனக இருந்து அஸுரர் களைக்கொன்றவன் விஞயகரால் படைக்கப்பட்ட அவ் வீரன் யார்? எனப் பேசிக்கொண்டனர். இதனிடையில் விஞயகர் விழுங்கிய நராந்தகனையும் வெளிப்படுத்தினர். அவன் பாலரூபியான விஞயகரைக் கண்டு ஆச்சர்ய மடைந்து ஒன்றும் புரியாமல் திகைத்து நின்ருன்.

ஆயினும் அச்சமின்றி பகவானை நோக்கி, சிறுவ ஞன நீ, இந்த்ரஜால வித்யையால்—மாயையால்—எனது சேனைகளை யழித்தாய்! எனது வீர்யத்தைக்கண்டு உல கெலாம் நடுங்குகின்றது! சிறுவஞன நீ, என்னுடன் போர் செய்யமுடியுமா? என்ருன். மூட! ஏன் பிதற்று கிருய்? உனது வீர்யமெல்லாம் சற்றுமுன் எங்கு சென் றது? சிறியதான தேள், மிருகேந்திரனைக் கொல்லாதா? சிறிய தீபம் பெருமிருளைப் போக்காதா? சிறிய அங்கு ஶத்தால் மதயானை அடங்கவில்லையா? என்று கூறி, போருக்கு அழைத்தார். நராந்தகன் வெட்டுக்கிளி தீபத் தில் விழுவதுபோல் பகவான்மீது பாய்ந்து தாக்க ஆரம் பித்தான்.

நீ சரணமடைந்து உன் உயிரைக் காத்துக்கொள். இல்லையேல் நீ இறப்பது ஸத்யம்! எனக் கூறினர் விநாயகர். அவன் பகவான் மீது பாணங்களை விட தனது பரஶுவினல் அவனது தலையை வெட்டி எறிந்தார். அசு ரன் தலை முளைத்து இருகரங்களாலும் இரு பர்வதங்களைக் கொண்டு அவர்மீது எறிந்தான். பரசுவினல் அதைப் பொடிப்பொடியாக்கித் தள்ளினர். அஸுரன் மாயையினல் பற்பல உருவங்களை எடுத்துப் பலவகையாக யுத்தம் செய்தான். இருவரது உடலிலும் ரத்தம் பெருகிற்று. வெற்றி தோல்வி ஏற்படவில்லை. விநாயகர் அறுந்த

தலை முளைக்கின்றது. அனேக வகையாக இவனடிபட்டு இறக்கவில்லையே! தேவர்களுக்கு எப்பொழுது அவரவர் ஸ்தானம் தருவது? இவனை உயிருடன் விட்டால் தேவர் களை ஸதா கொல்வானே! என்று யோசிக்குபொழுது அவர் எதிரில் பிநாகம் என்ற சிவனது வில் ஆகாயத்தி லிருந்து வந்தது. இதனால் யுத்தம் செய்யவேண்டும் என் பது ஈசன் ஆணை என வில்லை வளைத்து இருகரங்களாலும் பாணங்களை அசுரன் மார்பில் விட்டார். வஜ்ரத்தினால் அடிபட்ட பர்வதங்கள்போல் அவனது இரு கரங்களும் வெட்டி வீழ்த்தப்பட்டன. ஒன்று நராந்தகன் அரண்மனை வாசலிலும் மற்றொன்று அவன் தந்தை வீட்டு வாசலிலும் விழுந்தது.

மறுபடியும் அக்கரங்கள் முளைக்க அவைகளால் மலை களையும் மரங்களையும் பிடுங்கி விநாயகர் மீது வர்ஷித் தான். சந்த்ர சூர்யர் ப்ரகாசிக்காமல் உலகெலா மிருள் சூழ்ந்தது. விநாயகர் அம்மலைகளை எல்லாம் அறைக்ஷணத் தில் தூள் தூளாக்கினார். கணநாதன் கோபங்கொண்டு அவன் கால்களை வெட்டினார். அவை ஆகாய மார்க்க மாகச் சென்று தேவாந்தகனது வீட்டில் விழுந்தன. அதனால் பலர் மடிந்தனர். நராந்தகன் விசாலமான வாயைத் திறந்து விநாயகரை விழுங்க வந்தான். அதற் குள் அவன் கால்கள் முளைத்துவிட்டன. என் அவயவங் களை நீ வெட்டியதுபோல் உன் கால் கைகளை வெட்டு கிறேன் என்று அருகில் ஓடிவந்தான். விநாயகர் வர்ஷித்த பாணங்களை யெல்லாம் விழுங்கி தேவர்களும் பயப்படும் படி விநாயகரை எதிர்த்து ஓடிவந்தான். கணேசன் கோபத்துடன் ஓர் பாணத்தை சில மந்திரங்களைக் கூறி ஜபித்து விட்டார். அது நெருப்பைக் கக்கிக்கொண்டு வேகமாய்ச் சென்று நராந்தகன் தலையை யறுத்து அவன் தந்தை வீட்டில் எறிந்தது.

மற்றொரு தலை முளைத்து அவன் கர்ஜித்துக்கொண்டு எதிர்த்து வந்தான். மருமுறையும் அவன் தலையை அறுக்க பல லக்ஷம் தலைகள் முளைத்தன. சிந்தைகொண்ட விநாயகர், சிவன் இவனுக்களித்த வரத்தை எண்ணி மாயை யினால் அசுரன் ஒன்றையு மறியாதபடி மயக்கி விஸ்வரூப மெடுத்தார்.

